சங்கநூற்

# கதைக்கொத்து





THE SOUTH INDIA SAIVA SIDDHANTA
WORKS PUBLISHING SOCIETY
TINNEVELLY LTD
TINNEVELLY & MADRAS

கழக வெளியீடு—௨௧௪.

சங்க நூற்

# கதைக் கொத்து




தமிழ்ப்புலவர்

அ. நடராச பிள்ளையவர்கள்

எழுதியது





: : திருநெல்வேலித் தென்னிந்திய : :

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,

திருநெல்வேலி & சென்னை.


 [விலை ரூ. 1—[illegible]—0

# முன்னுரை

---

இக் கழகவழி முன்னரே வெளியிடப்பெற்ற சங்கநூற் சிறுகதைகள், செந்தமிழ் நாட்டுச் சிறு கதைகள் ஆகிய இரண்டு நூல்களையுஞ் சேர்த்துச் 'சங்கநூற் கதைக்கோத்து' என்ற பெயரால் இதனை வெளியிடுகின்றோம்.

இது பரிசுக்கும், நூல் நிலையத்துக்கும் பயன் படத் தக்கபடி உயர்ந்த கட்டடஞ் செய்யப் பெற்றுள்ளது.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# பொருளடக்கம்

கழக வெளியீடு-௧௧௫.

# சங்க நூற்
# சிறு கதைகள்



தமிழ்ப் புலவர்
அ. நடராஜ பிள்ளையவர்கள்
எழுதியவை.



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி : : சென்னை.

# பதிப்புரை

இச் சங்கநூற் சிறுகதைகள், சிலப்பதிகாரம், புறநானூறு முதலிய சங்க நூல்களிலிருந்து எடுக்கப்பெற்றன. இக் கழகத்திலிருந்து முன்னரே வெளிவந்த செந்தமிழ் நாட்டுச் சிறுகதைகள் என்ற நூலின் இரண்டாம் பகுதியாக இவை வைத்தெண்ணப்படும். இக் கதைகள் மாணவர்கட்கு உள்ளக்கிளர்ச்சியை ஊட்டி அன்பு, அறம், அறிவு வீரம் முதலிய சிறப்பியல்புகளை நல்கும் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை. சங்க நூல்களின் மாண்பினை நஞ் சிறுவர்கள் அறிதற்கும் இந்நூல் சிறந்த துணை புரியும்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# பொருளடக்கம்.

# சங்கநூற் சிறுகதைகள்



## 1. ஆலமர் செல்வனுக்கு அன்பன்

சிறப்பு வாய்ந்த பொதியமலை, பாண்டி வளநாட்டைச் சேர்ந்தது. அம் மலைச்சாரலிற் பண்டைக் காலத்தில் ஆய்நாடு என்றொரு சிற்றூர் இருந்தது. அவ்வூரைச் சிற்றரசன் ஒருவன் ஆண்டுவந்தான். அவன் பெயர் அண்டிரன். போரில் ஆற்றல் மிக்கவனாக விளங்கிய அவன், பாரில் ஈகையிற் சிறந்தவன் என்று புகழ் பெறவும் விழைந்தான். இரக்கமுடைமையும் ஈதலும் மன்னர்க்கு மாண்பளிப்பன என்பதே அவன் கருத்து. ஆகவே, மன்னுயிர்களையெல்லாம் தன் னுயிர்போலவே கருதி, வேண்டிய உதவிகளைச் செய்துவந்தான். அவன் எளியோர்களையும் புலவர்களையும் போற்றிப் பொருள் உதவி வந்தான். இல்லையென்று வந்தவர்களுக்கு இல்லையென்று கூறுமற் பரிந்து வரவேற்று இன்முகத்துடன் வேண்டிய பொருள்களை அவன் அளித்து வந்தான். ஒழிந்த வேளைகளில் அவன், ஊரைச்

சுற்றிப் பார்த்து வருவது வழக்கம். அவ்வாறு பார்த்து வரும்போது, உணவுப் பொருள்களும் பலவகையான உடைகளும் உடன்கொண்டு செல்வான். சென்று, செயலற்றவர்களாய் நோயுற்றுத் தவிக்கும் ஏழை எளியவர்களுக்கு அவன் உதவிசெய்து துன்பந் தவிர்த்து வருவான். கொடுப்பவனிருந்தால் கொள்பவர்களுக்குக் குறைவுண்டோ ? கணக்குவழக்கின்றி ஏழை மக்கள் குழுமிவந்து அவனிடம் பொருள்பெற்று ஏகுவாராயினர். இவ்வாறு அவனது கொடைத் திறம் ஆண்டுதோறும் பெருகி வருவதாயிற்று.

"வளவனாயினும் அளவறிந்து அழித்துண்," என்பது முதுமொழி. அளவறியாமற் செலவழிப்பவன் அரசனேயாயினும் கடிதில் ஆண்டியாகவே ஆவான். அண்டிரனும் கணக்கின்றி இவ்வாறு பலர்க்கும் பொருளுதவிசெய்து வந்தமையால், அரண்மனையிலுள்ள பொருள்களெல்லாம் நாளாவட்டத்திற் குறைவுறக் கண்டான். நாளைப்பொழுதுவருவோர்க்கு "நாளைவம்மின்" என்று ஒருகால் சொல்லவுங் கூடுமோ என்று அண்டிரன் உளம் மாழ்கினன். இத்தகைய இடுக்கணில் இரங்குவான் இறைவன்ஒருவனே என்று அவன் கருதினான். ஆகவே, மறுநாட்காலைப்பொழுதுபுலர்ந்ததும்வழக்கம்போல நீராடி நீறுபூசிக் கோவிலுக்குச் சென்றான்.

சென்று வழிபாடாற்றும்போது, அவன் நெடு நேரம் இறைவன் முன் உருக்கமான பல பாடல் களைப்பாடி உளங்கரைந்து அழுது அரற்றினான். பின்னர், வெளியேவந்த அவன் மீண்டும் அரண் மனைக்குச் செல்லவேண்டும் என்ற கருத்தில்லாத வனாய், அவ்வூரை அடுத்திருந்த கவிரமலைக் காட்டை நோக்கி நடந்தான். இன்ன இடம் போய்ச் சேரவேண்டும் என்ற எத்தகைய குறிப் பும் அவனுக்கு இல்லை. திடுமெனப் புறப்பட்டு வந்தவனாகையால், அண்டிரன் காட்டினுட் புகுந்தபின்பும் தன் மனம் போனவழிப் போய்க் கொண்டே இருந்தான்.

இவ்வாறு போய்க்கொண்டிருக்கையில், நண் பகலில் சிறிய புதரொன்றிலிருந்து நாகநாட்டு மன்னன் அவன்முன்வந்து தோன்றினான். அவ னைக் கண்ட அண்டிரன் வியப்புற்று, வாய்பேசா மற் கைகுவித்து நின்றான். உடனே நாகமன்னன் அவனை நோக்கி, "கொடுத்து இளைத்த கொடை யாளியே! உன் கொடைத்திறம் ஊரெங்கும் பாராட்டப்படுகிறது. இதோ இந்த நீலநிறப் பட்டாடையைப் பார். இதை உடலில் நீ போர்த் துக்கொள்வாயானால், வேண்டியமட்டும் இறைவ னருளால் நீ பொன்னும்பொருளும் பெறுவாய். வாகைமாலைசூடிய உன் கழுத்தில் நீ ஈகைமாலை

யையுஞ் சூடிக்கொள்ளலாம். ஆகவே, இதனைக் கொண்டுபோய், நீ மேலும்மேலும் கொடை வளர்த்து, மங்காப் புகழ்பெறுவாயாக!" என்று கூறிப் பட்டாடையைக்கொடுத்துவிட்டு, நொடிப் பொழுதில் தான் முன்வந்த புதர்வழியே உட் சென்று மறைந்தான்.

வியப்பும் மகிழ்ச்சியும் மீதூர அண்டிரன் உடனே தன் ஊர் திரும்புவானாயினன். மாலைப் பொழுதும் நெருங்கிற்று; பகலவன் மேற்றிசை யில் மறைந்தான். காடாகையால் மாலைப்பனி மழைபோலப் பெய்தது. ஆகவே, விரைந்து நடந்துவந்த அண்டிரன், வழியில் பெரிய ஆல மரம்ஒன்று இருக்கக்கண்டு, அதன் அடியிற்சற்று நின்றான். நின்ற அவன், தன் முன் அழகிய சிவலிங்கம் ஒன்று அம்மரத்தடியில் இருந்ததை யும், அது பனியினால் நனைந்திருந்ததையுங் கண் டான். நாகமன்னனைக் கண்ட காட்சியால் மனத் திட்பம் இழந்து வந்திருந்த அவன், 'ஐயகோ! அண்டினோரை ஆதரித்து, வேண்டிய வேண்டி யாங்கு ஈந்துதவும் இறைவன்பனியால் நனைந்து நடுக் கானில் துயருறவும் ஆகுமோ? ஆலமர்ந்த இச்செல்வனுக்கன்றிப் புல்லியேனாகிய எனக்கு இப்பட்டுடை எற்றுக்கு?" என்று எண்ணினான்; பின் தன் கையிலிருந்த பட்டாடையைச் சிவலிங் கத்தின்மீதுபோட்டுவிட்டுக் கைகுவித்துவணங்கி

ஊரையடைந்தான். ஊரையடைந்தவன் தன் அரண்மனையிற்சென்று பார்த்தபோது, கொண்ட வியப்புக்கு அளவேயில்லை. ஏன்? பொன்னும், மணியும், உணவுப்பொருள்களும் மட்டற்றனவாய் உயர்ந்தனவாய் அரண்மனையெங்கும் குவிந்து கிடக்கக் கண்டான். ஆகவே, அன்று முதல் தன்னுடைய கொடைத் தொழிலைப் பன்மடங்கு அதிகமாக அவன் இயற்றுவானாயினன். அண்டிரன் புகழ் மண்டலம் நிறைந்தது.

---

# 2. புலவர்பொருட்டு உயிர் நீத்த புரவலன்

மலையாள நாட்டிலே கருவூர் என்றொரு பட்டினம் இருந்தது. அப்பட்டினத்தையே சேரமான் கணைக்கால் இரும்பொறை என்ற சேரர் கோன் தன் தலைநகராகக் கொண்டு அதன்கண் வதிந்திருந்தான். இளமைதொட்டே இரும்பொறையின் உள்ளம் கல்வி கற்பதிலேயே முனைந்து சென்றது. அரச குலத்தோர்க்குரிய யானையேற்றம், குதிரையேற்றம், விற்போர், மற்போர் முதலிய போர்த்துறைப் பயிற்சிகளை அவன் மனம் நாடவில்லை. உண்பதும் உறங்குவதுந்

தவிர்ந்த மற்ற நேரங்களில் ஏடுங் கையுமாகவே அவன் காணப்பட்டான்.

அதுகண்ட அவனுடைய அமைச்சர்கள் ஒருவகையில் மிகவும் வியப்பெய்தினர்கள். ஆயினும், அக்கால நிலையையும், பிற நாட்டு மன்னர்களின் உளப்பாங்கையும் நோக்கி, அரசர்க்கு வேண்டியபடைக்கலப்பயிற்சி அவனுக்கு இன்றியமையாது வேண்டப்படுவதாகும் என்று பன்முறைவற்புறுத்திக் கூறிவந்தனர்.உற்றதுரைத்த அவ் வுண்மையாளருடைய பொன்மொழிகளை இரும்பொறை ஏற்றுக்கொள்ளவில்லை. "இருவர் பொர இசைந்தாலன்றிப் போர் நிகழாது. என் மனமோ வன்கண்மை மிக்க போர்ச் செயலைப் பின்பற்ற ஒருபோதும் இடங் கொடுக்காது. ஆகவே, பொர மனமிசையா என்னுடன் வேறெவனும் எதற்காகப் போரிட வரப்போகின்றான்? போர்வேண்டா எனக்குப் போர்த்துறைப் பயிற்சிதானும் எற்றுக்கோ?' என்று கூறி, அவன் அமைச்சர்களை மீண்டும் வாயெடுக்காமற் செய்துவிடுவான். கொண்ட கொள்கையை மாற்ற மனமிசையாத மன்னனை அமைச்சர்களும் அவன் போக்கில் விட்டுவிட்டனர்.

இந்த நிலையில் "போரென்றாற் பார் நடுங்கும்; ஆகவே, அஃதொழிவதே நலம்," என்ற

2

கொள்கையோடிருந்த நல்லாசிரியர் ஒருவர் இரும்பொறைக்குக் கிடைத்தார். அவ்வாசிரியர் பெயர் பொய்கையார். அவர் முற்றுங் கற்றுத் துறை போகிய பேரறிஞர். இலக்கண இலக்கியப் பரவையிலும், கடவுளுண்மை சாற்றும் மெய்ந்நூற் கடலிலும் தேக்கித் திளைத்தவர் அப் பெரியார். அகத் துறவு பூண்ட அவர் இவ் வுலக வாழ்வே பொய் என்னும் முடிபிற்கு வந்தவர். ஆகவே, எப்பொழுதும் இறைவனைப் போற்றியிருப்பதே முதற் கடமையாகும் என்ற கொள்கையுடையவர்.

"நல்ல நாளிலே நாழி பால் கறவாது; கோடைகாலத்திலா குறுணி பால் கறக்கப்போகிறது!" என்று தமிழ்நாட்டிற் பழமொழியொன்று வழங்கா நிற்கும். அதற்கேற்ப, இயல்பிலேயே தன் நாட்டு அரசியல் முறையில் கருத்தைச் செலுத்த மனமில்லாதிருந்த அரசன் இத்தகைய ஆசிரியரொருவரை அடைந்தபின் அதைக் குறித்து ஏன் என்ன என்று கேட்பதையே விட்டுவிட்டான். எனவே நாடு அவனுடைய அமைச்சர்களின் ஆட்சியிலேயே இருந்து வந்தது.

சேர நாட்டுச் செய்தி இவ்வாறிருக்க, சோணாட்டிலோ சோழன் செங்கணான் என்ற அரச னொருவன் உறையூரைத் தலைநகராகக்

கொண்டு அரசு புரிந்து வந்தான். இளமையி லிருந்தே அவனுக்குப் போர் புரிவதில் மிக்க விருப்பம். அரசர்க்குரிய உடற் பயிற்சிகளிலும் போர்த்துறைப் பயிற்சிகளிலுமே அவன் பெரிதுந் தன் கருத்தைச் செலுத்தி வந்தான். தன்னை ஒப்பாரும் மிக்காரும் வேறெவரும் இருக்கக் கூடாதென்றே அவன் நினைத்தவனாதலால், இடை விடாது பயின்று, போர்த்துறையில் வல்லமை மிக்கவனாக அவன் விளங்கினான்.

இடையிடையே, கல்வி கற்பதிலும் செங்கணான் ஒருசிறிது கருத்தூன்றி வந்தான். ஆயினும்; போதிய அளவுக்குக் கல்வி பயில அவனுடைய போர்த்துறைப் பயிற்சியும் அரசியல் அலுவல்களும் இடங் கொடுக்கவில்லை. ஆகவே, தான் கல்வியிற் குறைவுற்றவனாக இருக்க நேர்ந்தமை அவன் நெஞ்சில் உறுத்திக் கொண்டே யிருந்தது. இந் நிலையில் அவனுடைய அமைச்சர்கள் ஒருநாள் சேரமான் கணைக் காலிரும்பொறையின் கல்விப் பயிற்சியைப் புகழ்ந்து கொண்டாடி; செய்யுள் செய்வதில் அவனுக்கு இணையான அரசர்கள் யாருமில்லை என்று கூறினார்கள். கூறவே செங்கணான் அது பொறானாய்த் தானும் கல்வியில் வல்லவனாக வேண்டும் எனக் கருதி, அதற்கென்ன செய்தல் வேண்டும் என அமைச்சர்களை வினவினான்.

அவர்கள் நன்காராய்ந்து பார்த்து, "அரசே! விரைவிற் கல்விச் செல்வம் பெற ஒரே வழிதான் உண்டு. அதுசேரனுடைய ஆசிரியராக இருந்து வரும் பொய்கையாரிடம் கல்வி பயில்வதேயாம்." என்று கூறினர். அதுகேட்ட சோழன், உடனே பொய்கையாரைத் தம் அவைக்கு அனுப்பி வைக்குமாறு சேரனுக்கு ஒரு முடங்கல் விடுத்தான். அம் முடங்கலிற் சோழன் தான் உயர்தரக் கல்வி பயில முடிவு செய்திருப்பதும், அதற்குப் பொய்கையாரையே தான் ஆசிரியராகத் தேர்ந்து கொண்டிருப்பதும் விளக்கமாக எழுதியிருந்தான்.

II

உரிய காலத்தில் முடங்கலைப் பெற்ற சேரன் படித்துப் பார்த்துவிட்டு ஆசிரியரிடம் அளித்தான். அதனை வாங்கிப் படித்த அவர் போருக்கு மார்பு தட்டும் வன்கண்மை மிக்க அம்மன்னனுக்கு அறிவு நூல்கள் கற்பித்தல் தம்மால் இயலாது என்று கூறிவிட்டார். புலவர் முடிவைப் புரவலன், சோழனுக்கு எழுதி விடுத்தான். அவ்வளவோடு விட்டது தொல்லை என்று நினைத்த அவன் அந் நிகழ்ச்சியை அன்றே மறந்துபோனான்.

சேரன் விடுத்த மறுமடல் பெற்ற செங் கணுனே கண்கள் சிவந்தான்; சீறினான்; "என்னே அப் புலவர்க்கிருக்கும் இறுமாப்பு! தரமறியா அவ் விழிஞன் மறுத்துரைத்தானும்; திரமற்ற இப் புல்லியன் தடுத்துரையாமல், அப்படியே எழுதி விடுத்தானும்! ஆகட்டும் பார்க்கிறேன்," என்று உரத்த குரலிற் கூறினான். கூறியவன், உடனே அமைச்சர்களை விளித்து, "இன்றைய முப்பதாம் நாளுக்குள் பொய்கை யாரை உறையூர் எல்லை சேர்க்காவிட்டால், சோழன் போர்ப்பறை கருவூர் அரண்மனையுள் முழங்கும்?" என்று சேரனுக்கு உடனே செய்தி அனுப்புமாறு பணித்தான். இறைவன் மொழிக்கு எதிர் மொழியும் உண்டோ!

இச் செய்தியறிந்த சேரலர்கோன் இடி யொலி கேட்ட நாகம்போல் துடி துடித்து அயர்ந்தான். அவனுடைய அமைச்சர்கள் செய்வதறியாது திகைத்தனர்? பொய்கையார், "இதுவோ உலகம்!" என விழித்தார். படை வலி மிகுத்த சோழர் மடங்கலை எதிர்ப்பது எவ் வாறோ என்பது இரும்பொறைக்குக் கலக் கத்தை விளைத்தது. கையில் ஏடன்றி வாளேந்தி அறியாத இம்மன்னன் மெய்யாகச் சோழன் எதிர்த்து வந்தால் என் செய்

வாஞே என்பது அமைச்சர் உள்ளத்தில் ஏக்கத்தை விளைத்தது. இவ் வேழை மன்னனுக்கு வல்லிடி வந்தது. நம்மாலன்ருே என்ற நினைவு புலவர் அமைதியைக் குலைத்தது.

எனினும், அடாவடியாகப் போருக்கு அழைக்கும் இச்செயலொன்றே சோழன் மெய்ந்நூற் பயிற்சிக்கு அருகனல்லன் என்பதைத் தெரிவிப்பதாகாதோ என்று நினைத்தார் புலவர். அடாது செய்தவன் படாத பாடு படமாட்டாஞே? அறங்காத்து மறங்கொல்ல நிற்பவன் அல்லஞே இறைவன்? அத்தகையோன், அடாது செய்யும் சோழன் வெற்றிபெறவும் விடுவஞே? என்ற இத் திறத்த எண்ணங்களும் ஒன்றன்பின் ஒன்ருய் அவர் அகத்தே கிளைத்தன. கிளைக்கவே, அமைச்சர்களை நோக்கி, "ஏன் கலக்கம்? போருக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள். படைவலி குறையினும் நமக்கு அறவலி துணை செய்யும். அஞ்சவேண்டா!" என்று கூறி ஊக்கிஞர். வேறு வழி காணுத அமைச்சர்களும். அவ்வாறே தம்மால் இயன்றவளவு முயன்று சிறு படையொன்றையும், அதற்கு வேண்டிய போர்க் கருவிகளையுந் திரட்டிஞர்கள்.

குறித்த தவணைக்குள் புலவர்வாராமற்போகவே, கடலன்ன பெரும்படையொன்றுடன் செங்கணுன் சேரநாடு நோக்கிப் புறப்பட்டான். சேர

னும் தான் திரட்டிய சிறு படையுடனும் பொய்கையாருடனும் சோழனை எதிர்க்கப் புறப்பட்டு வந்தான். இருவர் படைகளும் கழுமலம் என்ற ஊரின் அருகில் ஒன்றுடன் ஒன்று எதிருற்றுத் தாக்கின. சேரனுடைய யானைப் படையைச் சோழனுடைய பயிற்சி மிக்க சிறந்த குதிரைப் படை சிதற அடித்துவிட்டது. எண்ணிலும், திறமையிலும் மிகுந்திருந்த சோணாட்டுப் படையின் முன் எதிர்நிற்க முடியாது, சேரவீரர் பலர் புறங்காட்டினர்; சேரர்கோனும் செந்தமிழ்ப் புலவரும் சிறைப்பட்டனர்.

III

சிறைப்பட்ட இருவரையும் சோழன் தன் நாடு சேர்ப்பித்துக் குடவாயிற் கோட்டம் என்ற இடத்திலுள்ள சிறைச்சாலையில் தனித்தனியாக அடைப்பித்தான். அரசுபுரிய விரும்புவோன் அதற்குரிய படைக்கலப் பயிற்சியைப் பெற்றிருக்கவேண்டும் என்று அமைச்சர்கள் சுட்டிக் கூறியதைக் காதில் வாங்காததன் பயனன்றோ இத்தாழ்வு என இரும்பொறை எண்ணி யெண்ணி உளங்கரைந்தான். திறை கவரும் மன்னன் சிறை புகுந்தமை, தன் பொருட்டே யன்றோ என்பதை நினைந்து நினைந்து பொய்கையார் அனலில் இட்ட மெழுகுபோல் உருகினார்; அரசனை மீட்பதற்கு வழியென்ன என்று

ஆழ்ந்து உன்னிப் பார்த்தார். தமிழ் கற்பதற்குச் சோழன் விருப்பங்கொண் டிருந்ததால், தமிழ்ச் செய்யுளை ஒருகால் அவன் விரும்பியேற்றுப் பரிசளிக்கக்கூடும் என்று அவருக்கு ஓரெண்ணம் உதித்தது. உடனே தாம் கண்ட கழுமலப் போர் நிகழ்ச்சியையும், வெற்றி கொண்ட சோழன் சிறப்பையும் புகழ்ந்து பாடிக் களவழி நாற்பது என்று ஒரு நூல் செய்தார். சோழனைப் பார்க்க நேரும் போது இந் நூலை அவனிடங் கொடுப்பதென்றும், அதற்குப் பரிசிலாகச் சேரனைச் சிறையினின்று விடுவிக்கக் கேட்ப தென்றும் முடிவு செய்திருந்தார்.

அம்முடிபுக் கேற்றவாறு, மறுநாள், சோழன் அவைக்கு அவரை அழைப்பதாக வீரர் சிலர் வந்து பொய்கையாரிடம் தெரிவித்தனர். கடிதில் இயற்றிய அரிய செய்யுள் நூலுடன் அவர் உடனே அவைக்களம் சேர்ந்தார். அவரைக் கண்ட சோழன், "உலகியல்பு அறியாது அறிவுநூல் கற்ற அரும்புலவீர்! போர்த்திறம், அரசாளும் வேந்தர்க்கு எத்துணை இன்றியமையாதது என்பது இப்பொழுதேனும் உமக்கு விளங்கிற்றோ?" என வினவினான். "அரசே! நீர் சிறந்தெடுத்துக் கூறும் போர்த் திறனும், அது பயக்கும் பெருவெற்றியும் இவ் வுலக வாழ்க்கைக்குத்தானே பயன்படும்? அவ்

வுலக வாழ்க்கைக்கும் உதவுமோ?'' எனப் புலவர் அஞ்சாது மறுத்து வினவினர். அதற்கு விடையாக, "நாடாள்பவர் போர்மறம் பூண்டு பகையழித்து, நாட்டினர்க்கு அமைதியை அளித்தாலொழிய மெய்யுணர்வு பெறுதற்கு வேண்டிய வசதியிருக்க முடியாது,'' என்று சோழன் விளக்கங் கூறினன். அக் கூற்றின் உண்மையறிந்த புலவர், "அரசரேறே, தாம் கூறுவது உண்மையே. இதனை நன்குணராது இப் பாவியேன் ஏழைச் சேரனைப் போர்த்துறை பயிலவொட்டாது தடுத்தேன். என் சொற் கேட்டதனல் மன்னன் இப்பொழுது காவலில் இருக்கின்றான். அன்புகூர்ந்து அவனை விடுவிக்கச் செய்து என்னை ஒறுத்திடுக. அவ்வரசன் விடுதலையைப் பரிசிலாக உம்மிடமிருந்து பெறுவான் கருதி, யான் பாடிய 'களவழி நாற்பது' இதோ சோழர்கோன் திருவடிகளை அலங்கரிக்கின்றது'' என்று கூறி, அந்நூலை அரசன் திருவடிகளிற் பணிவுடன் சேர்த்தார்.

அதுகண்டு பேருவகை பூத்த செங்கணான் நூலைப் பரிந்தெடுத்துக் கண்களில் ஒத்திக்கொண்டான். அதனை அப்பொழுதே பாடி நயங்கூறுமாறு புலவரைப் பணித்தான்; அவ்வாறே புலவர் செய்யவே, கண்களில் உவகை நீர் துளிப்ப, "சேரன் தன்னூர் சேர்வானாக!''

என்று கட்டளையிட்டான். கட்டளையிட்டவாறே சேரனை விடுவிக்கக் கருதிப் பொய்கையாரையும் அழைத்துக்கொண்டு சோழன் சிறைக்கூடம் நோக்கி விரைந்து நடந்தான்.



சிறைக்கூடத்திலோ, மலையாள மன்னன் தன் நிலைமையை நினைந்து நினைந்து பாகா யுருகினான். சிறை காவலர் தனக்கு அவ்வப்

போது கொடுத்த உணவுப் பொருள்களை உண்ப தற்கும் அவன் மனங் இடங்கொடுக்கவில்லை. உறக்கம் என்பது அவனுக்கு வரவில்லை. ஆகவே ஊணும் உறக்கமும் இல்லாமல் உள்ளம் நைந் துருகிய அவன் நீர்வேட்கை தாளமுடியாது சிறைகாவலனொருவனை நீர் கொணருமாறு கேட்டான். ஆனால், கேட்டபோது, தான் சிறை யிலிருப்பதை மறந்து, இயற்கையாகவே மன்ன னுக்குரிய பெருமிதத்துடன், கட்டளையிடுவது போலக் கேட்டான். "சிறைப்பட்டும் இத்துணை இறுமாப்பா!" என்று ஏளனமாய்க் கூறிய வண்ணம் காவலனொருவன் நீர் கொணரச் சென் றான். அவன் கூறிய சொற்கள் இரும்பொறை யின் உள்ளத்தில் அம்புபோல் தைத்தன. "ஆ! வீரர் மரபிற் பிறந்து ஒப்பரிய மலைநாட்டை ஆண்ட யான் போரிற் பகைவர் வாளுக்கு இரை யாகாமற் பிடிபட்டதாலன்றோ இச்சொற்களைக் கேட்கலானேன்! சங்கிலியாற் கட்டுண்டு நாய் போன்று இழுத்துவரப்பட்டுக் காவலில் வைக் கப்பட்டிருந்தும், மானமின்றி, உயிர்காப்பான் வேண்டி, நீர் வேண்டினேனே! மானமிழந்தும் உயிர் நீக்க விரும்பாத யானும் ஓரரசனோ?" என்று வாய்விட்டு அலறினான். அவன் கால்கள் தள்ளாடின. வெட்டுண்ட மரம்போன்று அவன்

கீழே சாய்ந்தான். சாய்ந்த அந்நொடியே அவன் உயிர் விண்ணுலகு நாடிச் சென்றது.

உயிர் விடுமுன் அவன் வாய்விட்டலறிய சொற்கள் அவனை விடுவிக்க விரைந்து வந்து கொண்டிருந்த சோழன் காதுகளிலும் புலவர் காதுகளிலும் விழுந்தன. இருவரும் முன்னினும் மிக்க விரைவுடன் சிறைக்கூடம் அணுகினார்; மன்னன் விழுந்து உயிர் நீத்துக் கிடந்த நிலையைக் கண்டனர். "மானம் மிக்க மன்னுவோ!" என்று உரக்க ஒருமுறை கூவிய பொய்கையார் பிணமாகத் தரையில் விழுந்தார். இருவர் உயிருக்கும் எமனாக இருந்த சோழன் ஏங்கித் திகைத்து நின்றான்.

உயிரிற் சிறந்தன்று மானமுடைமை.

---

## 3. மலையமான் திருமுடிக்காரி

திருக்கோவலூரிலே சிற்றரசன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் மலையமான். அவன் சிறந்த வீரன்; குதிரையேற்றத்தில் மிகவும் பெயர்போனவன். மேலும், அக்காலப் போர் முறைகளையெல்லாம் அவன் நன்கு தெரிந்திருந்தான். அவனுக்குக் குதிரைகளின்மேல ஏற்

பட்ட பெரு விருப்பத்தால், அவன் படையிற் பெரும் பகுதி குதிரைப்படையாகவே இருந் தது. அவன் ஏறிச் செல்வதற்கென்று வைத்



திருந்த குதிரையும் மிகப் பருத்துயர்ந்து கரிய நிறமாக இருந்தது. அதனால், அக் குதிரைக்குக் காரி என்றே பெயர் கொடுக்கப்பட்டிருந்தது. குதிரையேயாயினும் அஃது அவனிடத்தில்

யும், வரலாற்றையும் ஆராய்ந்துகொண்டிருப்பது சிறந்ததா? எது சிறந்தது? -என்று தன்னைத் தானே கேட்டுக்கொள்வான். உற்றவிடத்து உதவுவதே தலைசிறந்தது என்பது அவன் முடிபு. மேலும், எளியாரை வலியார் வாட்டினால் வலியாரைத் தெய்வம் வாட்டும் என்பதையும் அவன் முழுதும் ஏற்றுக்கொள்வதில்லை. எளியாரை வாட்டும் வலியாரை, அவரினும் மேம்பட்ட வலிமையுடையார் வாட்டுவதுதான் நீதி என்றே அவன் கருதி வந்தான்; கருதியதற்கேற்ப, நேர்ந்த போதெல்லாம் செய்கையிற் செய்துகாட்டியும் வந்தான்.

அவன் காலத்தில், சோழநாட்டைப் பெருநற்கிள்ளி என்ற அரசன் ஆண்டுவந்தான். உறையூரே அவனுக்குத் தலைநகர். படைவலியிலும், பொருள் வலியிலும் அவன் சிறிது குறைபாடுற்றிருந்தான். எனவே, அவன் சிற்றரசர்களிலொருவனாகவே கருதப்பட்டு வந்தான். அவனை மலையாள நாட்டுச் சிற்றரசனான யானைக்கண்சேய் திடுமெனத் திரண்ட படைகளுடன் வந்து தாக்கித் தோல்வியுறச் செய்தான். எளியோனான சோழன் இவ்வாறு தாக்குண்டமை காரிக்குச் சினத்தை விளைத்தது. உடனே தன்னுடைய படைகளைத் திரட்டிக்கொண்டு சென்று யானைக்கண்சேயை வலியுறத் தாக்கி அவனைப் புறங்

மிகுந்த அன்புடையதாயிருந்தது. அவனும் அதனைத் தன் உயிரைப்போலப் பாதுகாத்து வந்தான். அவன் எங்குச் சென்றாலும் அக் குதிரையின்மீதேதான் செல்வது வழக்கம். ஆகவே, அக் குதிரையின் பெயரையும் சேர்த்து, அவனை அந் நாட்டு மக்கள் மலையமான் திருமுடிக் காரி என அழைக்கலாயினர்.

மலையமான் திருமுடிக்காரி அரசியல் முறையிலும் தேர்ந்த அறிவுடையவனாக இருந்தான்; கல்வியிலும் சிறந்து காணப்பட்டான். தன்னைப் போலவே தன் நாட்டுமக்கள் பலரும் கல்வி கற்க வேண்டுமென்று அவன் விரும்பினான். ஆகையால், அவன் நாடெங்கும் பல பள்ளிக்கூடங்கள் அமைத்தான்; அறிவாளிகள் பலரை அழைத்து ஆதரித்துப் போற்றினான்.

கல்விக்கொடையேயன்றிப்பொருட்கொடையிலும் காரி சிறந்து விளங்கினான். நலிந்தோர்க்கு உதவிபுரிதலே நல்லறம் என்பது அவன் கொள்கை. ஏற்பவன் இடுதற்கு ஏற்றவனா எனக் கருதிப் பார்த்தபின் ஈதல்வேண்டும் என்பதில் அவனுக்கு உடன்பாடில்லை. இடுக்கணுற்றுத் துயரெய்தும் ஒருவனுக்கு விரைந்து ஏற்ற உதவியைச் செய்வது சிறந்ததா? ஏற்பவன் எப்படிப்பட்டவன் என்பதையும், அவனுடைய பழக்க வழக்கங்களை

காட்டியோடச் செய்தான். இவ்வாறே சிற்றரசர்கள் பலருக்கும் எதிர்ப்பு நேர்ந்துழியெல்லாம் காரி விரைந்து சென்று உதவிபுரிந்து வந்தான்.

இதனால் அவ்வப்போது தோல்வியுறும் அரசர்களிற் பலர் எவ்வாறு காரியை ஒழிப்பதென வழிதேடி வந்தனர். அவர்களுள் மலையாள நாட்டைச்சேர்ந்த தகடூருக்கு அரசனாக இருந்த அதியமான் என்னும் அரசன் கடலனைய யானைப்படை யொன்றைத் திரட்டிக்கொண்டு வந்து மலையமான் திருமுடிக்காரியைத் தாக்கினான். மலையமான் சற்றும் பின்வாங்காது தன் குதிரைப் படைகளுடன் முன்சென்று எதிர்த்தான். ஆனால், அவனுடைய குதிரைகள் திரண்ட யானைப் படைகளைக் கண்டவுடன் வெருண்டு பின்வாங்கி ஓடத் தொடங்கின. அதனால், காரிக்கு விரைவில் தோல்வியுண்டாயிற்று. தோல்வி யுண்டாகவே, தன் குதிரையிலிருந்தபடியே அவன் உடனே நாட்டைவிட்டோடி மலையாள நாட்டுப்பேரரசனை பெருஞ்சேரல் இரும்பொறையினிடம் அடைக்கலம் புகுந்தான்.

பெருஞ்சேரல் இரும்பொறை காரியின் உயர் பண்புகளை நன்கறிவான்; ஆதலால் அவனை விரைந்தேற்று ஆறுதல் கூறினான். பின்னர், அவன் பெரிய யானைப்படை யொன்றுடன்

சென்று அதியமானை எதிர்த்தான். அப்பொழுது அதியமானுக்குத் துணையாக, ஓரி என்னும் கொல்லிமலை அரசன் ஒருவன் தன் படைகளுடன் புறப்பட்டு வந்தான். திருமுடிக்காரி இரும்பொறையின் படைகளில் ஒரு பிரிவை நடத்திச் சென்று ஓரியைக் கொன்று வெற்றி கொண்டான். இரும்பொறையும் அதியமானை எதிர்த்துக் கொன்று வெற்றிக்கொடி நாட்டினான். அதன் பின், காரி முன்போலவே திருக்கோவலூர் அடைந்து நீதிநெறி வழுவாது அரசு செலுத்தி வந்தான்.

---

# 4. புணைகழல் மறவர்

மறவர் பெருங்குடி என்று புகழ் மிகுந்த ஓர் ஊர் இருந்தது. பெயருக்கேற்ப, அவ்வூரிலிருந்த மக்கள் எல்லோரும் வீரம் மிகுந்து காணப்பட்டார்கள். அச்சம் என்ற சொல் அவர்களுடைய அகராதியில் இருந்ததில்லைபோலும்! அவர்களில் ஒவ்வோர் ஆண்மகனும் போர்த்திறத்தில் சிறந்திருந்தமைக்கு அறிகுறியாகத் தன் காலில் வீரக்கழல் அணிந்திருப்பான். மூண்டதுபோரெனின், "மாண்டனர் பகைவர்" என்றே அவ் வீரர் கூறுவர்; யார் பகைவர்கள் என்றுகூட அறிய விரும்பார். ஆண்மக்களைப் போர்புரியத்

தூண்டுவதில் அவ்வூர்ப் பெண்களுக்கு மிகுந்த விருப்பம். அவர்கள், அஞ்சாத நெஞ்சும் அடங்காத நாட்டுப்பற்றும் உடையவர்கள்; வேண்டுமானால், வாளேந்தித் தாமே போர்செய் யவும் பின்வாங்கமாட்டார்கள்.

அம் மறவர் பெருங்குடியின் அரசன்மீது, ஒருமுறை, மற்றோர் அரசன் படையெடுத்து வந்தான். அதுகண்ட அவ்வூர் மறவர்களுக்குக் கண்கள் சிவந்தன; சினத்தால் மீசைகள் துடித்தன. மறத்தியர்களும் உள்ளக்கிளர்ச்சி மிக்கவர்களாய் உடனே போருக்குப் புறப்படுமாறு மறவ வீரர்களைத் தூண்டினர். வீட்டிற்கு ஓராண்மகன் விழுக்காடு மறவர்களிற் பலர் போர்க்கோலந் தாங்கிப் புறப்பட்டார்கள். அதுகண்டு உளம் மகிழ்ந்த அரசன், இவர்களுக்குப் படைத் தலைவனாக அமர்ந்து, பகைவரை எதிர்த்துத் தாக்கினான். ஒருபகல் முழுதும் போர் கடுமையாக நடந்தது. இருதிறத்தினர் படைகளிலும் வீரர்கள் பலர் மடிந்தனர்.

ஆண்டிற் சற்று முதிர்ந்தவனாகத் தோன்றிய பெருங்குடி வீரனொருவன், எதிரியின் படையில் யானையேறிவந்த வீரனொருவனைத் தாக்கினான். யானைவீரனோ தன் கையிலுள்ள வில்லை வளைத்து அம்முதியோனை ஒரே அம்பினால் எய்து வீழ்த்தினான்.

முதியோன் வீழ்ந்துபட்ட செய்தி அவன் வீட்டினர்க்கு எட்டவே, அவன் மகன் உடனே போர்க்கருவிகள் ஏந்திச் செருமுனை அடைந்தான். வாட்போரில் வல்லவனுன அவன் எதிரியின் குதிரைப் படையினுட் புகுந்தான்; தன் கைவாளை இடசாரி வலசாரியாகக் கறங்குபோற் சுழற்றி வீசினுன். அவன் கைவாளால் வெட்டுண்டு குதிரைகள் பல மாய்ந்தன; வீரர்கள் பலர் மடிந்தனர். அதுகண்டு உளந்துடித்த பகையரசன் தான் ஏறி வந்த யானையின்மீதிருந்தபடியே வேல் ஒன்றை எறிந்தான்; எறிந்த அவ்வேலால் அவ்வீரன் தாக்குண்டு இறந்தான்.

அவன் இறந்த செய்தியும் அவன் வீட்டிற்கு எட்டிற்று. அவன் மனைவி சீற்றம் மிகுந்தனளே யன்றிக் கலக்கம் எய்தவில்லை. தன் வீட்டில் எட்டாண்டு நிரம்பாத தன் சிறுமகன் ஒருவனையன்றி வேறு ஆண்பிள்ளை இல்லை யென்பதை அவள் உணர்ந்தாள்; உணர்ந்தாலும், தன் அரசன் எப்படியும் வெற்றி பெறவேண்டும் என்ற ஒரே நோக்கங்கொண்டவளாதலால், தன் சிறுமகனைக் கூவி அழைத்தாள். சிறுவன் மலர்ந்த முகத்துடன் தாய் முன் வந்து நின்ருன். நின்ற அவன் தலைமயிரை நெய் ஊட்டி வாரிமுடித்து, அம்முடியின் மீது அழகிய பல

பூக்களைச் சூட்டினாள் அவ்வீரத்தாய்; வெண்ணிறம் பொருந்திய ஆடையொன்றை அவன்



இடுப்பிற் சுற்றி வரிந்து கட்டினாள்; பளபள வென்று மின்னி ஒளிவிட்டுக் கொண்டிருந்த

வேலொன்றினை எடுத்து அச் சிறுவன் வலக் கையிற் கொடுத்தாள்; இடக்கையில் ஒரு கேடயத்தைச் சேர்த்தாள்; "பிள்ளாய்! போர்க்களம் புகுந்து உன் பாட்டனையும் தந்தையையுங் கொன்ற பகைவர்களைக் கொல்வாயாக!" என்று வாழ்த்தி வழியனுப்பினாள்.

தாய்ப்பாலுடன் வீரத்தைக் கலந்து அருந்தியிருந்த அப் பிள்ளையும் மான் கன்றுபோலத் துள்ளிக் குதித்தோடினான்; ஓடிப்போர்முனையை அடைந்தான்; அடைந்து, யார் இன்னார் என்று குறியாமல் தன்னெதிரே வாளேந்திநின்ற பெரிய வீரனொருவனைத் தாக்கினான். அதுகண்ட அவ்வீரன் முதலிற் சிறிது பின்னிடைந்தான்; சிறுவனோ சிங்கக்குட்டி போன்று அவ் வீரன் மீது பாய்ந்தான். பாய்ந்தது கண்டு, தன் கையிலுள்ள குத்தீட்டியைச் சிறுவனுக்கு நேராக அவ் வீரன் நீட்டிப் பிடித்தான். அந்த ஈட்டியின்மீது பாய்ந்த சிறுவன், மார்பு பிளந்து வீழ்ந்தான். மார்பிடைப் பாய்ந்த ஈட்டியை மீண்டும் எடுக்கவும் மனமில்லாதவனாய் எதிரி வீரன் வியப்புடன் அப்பாற் சென்றான்.

எட்டு ஆண்டு நிரம்பாத இளம்பிள்ளையொருவன் இவ்வாறு வேலேந்திவந்து பாய்ந்துமாய்ந்த செய்தி பெருங்குடி மறவர்களின்

படையிற் பரவிற்று. பரவவே அப் படைமற வர்கள் ஊக்கம் மிகுந்து கொக்கரித்தார்கள். இளைஞர்கள் பலர் அடங்கிய படையொன்று ஊரிலிருந்து புதிதாகத் திரண்டு, போர் செய்யும் பெருங்குடிப் படையின் உதவிக்கு வந்து சேர்ந்தது. சேரவே சிறிது நேரத்திற்குள் எதிரியின் படை புறங்காட்டி ஓடிற்று. அன்றைப் போர், பெருங்குடி மறவர்க்கு வெற்றியாகவே முடிந்தது.

வெற்றி விழாவை அவ்வூரார் கொண்டாடிய சிறப்பை எடுத்துரைக்கவும் வேண்டுமோ ? இசைக்கருவிகள் எங்கும் முழங்கின ; கோவில்களில் வழிபாடுகள் இயற்றப்பட்டன ; எண்ணிறந்த வீரர்களும் மக்களும் அடங்கிய மாபெரும் ஊர்வலம் ஒன்று அவ்வூரைச் சுற்றிவந்தது. ஊரெங்கும் உண்டாட்டுங் களியாட்டுமாக இருந்தது.

தன் சிறுபிள்ளையை ஊக்கிப் போர்க்கனுப்பிய அப்பெண்மணி தன்னூர் அரசன் வெற்றியுற்றமை கேட்டுப் பெருமகிழ்வு எய்தினள். மாமனும், கணவனுமேயன்றி, ஒரேமகனும் இறந்துபட்ட கவலை அவளுக்கு ஒருசிறிதும் இருந்ததாகத் தோன்றவில்லை. பால் மணம் மாறாத தன் பிள்ளை போருக்குச் சென்றதனாலேதான் அரச

னுக்குவெற்றியுண்டாயிற்று என்று அவள் நம்பி னாள். அம் மகனை ஈன்ற பொழுது அவள் அடைந்த உவகையினும் பன்மடங்கு அதிக மான உவகையை அவன் போரில் இறந்தது கேட்டு அவள் அடைந்தாள் என்றே கூறலாம். ஊரெங்கும் அவளுடைய ஒப்பரிய வீரமும், அவள் மகனின் தீரச் செயலுமே பேச்சாக இருந்தன. இது நிற்க ;

அவ்வூரிலுள்ளோரில் ஒருசிலர் அவளி டஞ் சென்று, "உன் மகனாவது சண்டையிட வாவது! அவன் எதிரிகள் படையைப் பார்த்து, அச்சம் மேலிட்டுப் புறங்காட்டி ஓடிவரும் போது, கொல்லப்பட்டானே; இதில் நீ பெரு மை பாராட்டிக்கொள்ள இருப்பது என் னவோ?" என்று வேடிக்கையாகக் கேட்டார் கள். கேட்டதுதான் ; புனல் பெருகும் அவள் கண்கள் அனல் உகுப்பவாயின; நெஞ்சு துடி துடிக்க அவள் ஓடோடி உட்சென்று ஒருவாளை எடுத்து வந்தாள். வந்து, "ஐயன்மீர்! என்ன சொன்னீர்கள் ! என் மகன் புறங்காட்டி யோடி னானு? இதோ சென்று தேடிப் பார்க்கின்றேன். அவன் மார்பிற் புண்படாது முதுகிற்புண்பட்டு மடிந்திருப்பானாயின், அவ்விழிஞனுக்குப் பா லூட்டிய என் மார்பை இவ்வாளால் அரிந்தெறி வேன் ." என்று அவள் வஞ்சினங் கூறினாள்.

கூறியவள், இராப்பொழுதென்றும் பாராது, இடக்கையில் விளக்கொன்றையும் எடுத்துக் கொண்டு போர்க்களம் நோக்கி விரைந்து சென்றாள். களமெங்கும் நாயும் நரியும் இட்ட ஊளையொலி காதுகளைத் தொளைத்தது. பேயும் செல்ல அஞ்சும் அவ்வேளையில், கால்மாடு தலைமாடாய் விழுந்து இறந்துகிடந்த பிணங்களினிடையே அவ் வீரப் பெண்மணி சென்று தன் மைந்தனைத் தேடலானாள்; ஒவ்வொரு சவமாகப் புரட்டிப் புரட்டிப் பார்த்தாள்; கால்வேறு தலைவேறாய்க் கிடந்த யானைகளின் கீழும், குதிரைகளின் கீழும் தேடிப் பார்த்தாள்; காடாயிருந்த பிணக் குவியல்களின் இடையிலே ஓரிடத்தில் தன் மகன் மார்பில் பாய்ந்த ஈட்டியுடன் வீழ்ந்து கிடப்பதைச் சிறிதுநேரத்திற் கண்டாள். விழுப்புண் பட்டு வீழ்ந்த மகனைக் கண்ட அவ்வீரமகள் அடங்கா மகிழ்ச்சிகொண்டு, “ஆ! இவனே என் பிள்ளை!” என்று ஆர்ப்பரித்தாள்.

மறவர்தம் மாண்பு மறக்கவும் படுமோ!

---

# 5. தற்பெருமையில்லாத தண்ணளியோன்

பாண்டிய நாட்டைச் சேர்ந்தது நள்ளியூர். அவ்வூரைச் சிற்றரசன் ஒருவன் ஆண்டு வந்தான். அவன் பெயர் கண்டீரக்கோ. ஏழை

யெளியவர்களுக்கும், புலவர்களுக்கும் மழைமுகி லைப்போல அவன் பொருள் சொரிந்து உதவிய வன். புகழ் கருதியோ முகமன் கருதியோ அவன் அவ்வாறு செய்தவனல்லன்; வலக்கை செய் வதை இடக்கை அறிதல்கூடாது என்ற உண் மையைப் பின்பற்றியவன் அத் தமிழ் மன்னன். நீதிவழுவாது அவன்தன் குடிமக்களைப் புரந்து வந்தான்; ஆதலின், புகழ் விரும்பாத அவனை மக்கள் பலபடப் புகழ்ந்து பாராட்டுவாராயினர். நள்ளியூரையேயன்றி மற்றுந் தொலைவிலுள்ள பல ஊர்களிலும் அவன் புகழ் பரவுவதாயிற்று.

இஃது இவ்வாறாக, அவ்வூரை அடுத்த பெரிய காட்டில் இருந்த கொடிய விலங்குகள் ஒரு சமயம் ஊரினுட் புகுந்தன; புகுந்து ஆடு மாடுகளை அடித்துக்கொன்று பயிர்பச்சைகளையும் அழிப்பவாயின. அஃதறிந்த கண்டீரக்கோ உடனே வில்லுங் கையுமாக, வேடர் பலர் பின் தொடர வேட்டைக்குப் புறப்பட்டான்; எதிர்ப் பட்ட கொடிய விலங்குகள் பலவற்றைத் துண் டாடிக் குவித்தான். அவ்வேளை, பெரும் புலி யொன்று வேடர்கள் கைக்குத்தப்பி வனத்தினுட் பாய்ந்து சென்றது. அவ்வாறு அது செல்வ தைக் கண்டு, குதிரைமீதிருந்தபடியே அவன் அதனைப் பின்தொடர்ந்து தனியே துரத்திச் சென்றான். நெடுந்தொலைவு காடு மேடுகள் எல்

லாங் கடந்து தொடர்ந்து சென்று இறுதியில் அவன் அப் புலியைத் தாக்கினன். தாக்குண்ட அப் புலி சீற்றங்கொண்டு, அவன் ஏறியிருந்த குதிரையின்மீது பாய்ந்து, அதனை அறைந்து கொன்றது. ஆயினும், மறுநொடியில் அது தானும் இறந்து வீழ்ந்தது. குதிரையை இழந்த கண்டீரக்கோ கால்நடையாகவே ஊர் திரும்ப வேண்டியதாயிற்று. ஆகவே, வேட்டையாடிய களைப்பினல் அலுப்புற்றிருந்த அவன் வில்லுங் கையுமாய் மெல்ல நடந்து வந்து கொண்டிருந்தான்.

அவ்வேளை, வன்பரணர் என்ற புலவரொருவர் கண்டீரக்கோவின் கொடைத் திறம் கேள்வியுற்று, அவனிடம் பரிசில் பெற விரும்பி, அக் காட்டுவழியே நள்ளியூரை நாடிவந்துகொண்டிருந்தார். வந்தவர் தம்முன், எதிர்ப்பட்ட வேட்டை வீரனைக் கண்டார்; அவன் யாரோ ஒரு வேடனெனக் கருதினர். ஆகவே, அவர் கண்டீரக்கோவை அண்மி, "ஐயா வேடரே! என்னைப் பசி மிக வாட்டுகிறது. இக்காட்டில் உணவும் நீரும்பெறும் வழியாதும் அறிகிலேன்!" என இரக்கக் குரலிற் கூறினர் கூறி, அவர் களைப்பு மிகுதியால் அருகிலிருந்த ஒரு மரத்தடியிற் சாய்ந்தார். உடனே, கண்டீரவன் காட்டி

னுட் சென்று, இனிய கனிகள் சிலவற்றையும், தேக்கிலை யொன்றிற் சிறிது நீரையும் கொண்டு



வந்து புலவருக்கு அளித்தான். உண்டு பசி தீர்ந்த வன்பரணர், எதிர்மொழிகூறாது சென்று

நீருங் கனியுங் கொண்டுவந்து உதவிய அவன் யாவனென அறிய விரும்பினார். விரும்பி, "ஐயா! என் உள்ளங்குளிர்ந்தது. பல்வளமும் பெருக நீர் வாழ்வீராக! நீர் யாரென்று யான் அறியலாமோ?" என அவர் பணிவாய்க் கேட்டார். கைம்மாறு கருதாத உதவி செய்வதற்கென்றே கங்கணங் கட்டிக்கொண்டிருந்த கண்டீரக்கோவோ தான் அக் காட்டிலுள்ள வேடர்தலைவன் என்று சுருங்கக் கூறினான். கூறியவன் தன் கழுத்திலிருந்த நன்முத்துமாலை யொன்றைக் கழற்றிப் புலவர் கையிற் கொடுத்துவிட்டு விரைந்து ஊரை நோக்கி நடந்தான்.

வியப்பும் திகைப்பும் ஒருங்கே கொண்டார் புலவர். கொலைக்கஞ்சா வேடர்களிலும் புகழ் விரும்பாப் புண்ணியர் உளரோ என ஐயுற்றார்; இதுவும் புதுமைபோலும் என்று கருதி வியப்புடன் எழுந்து, நள்ளியூரை நோக்கி, நடக்கலானார். நடந்தவர், அவ்வழியே தமக்கெதிராகச் சிலர் வருவதைக் கண்டார். எதிரிற் சென்ற வேடர் தலைவனை அவர்கள் பார்த்திருப்பார்களென்று அவர் நம்பினார். ஆகவே, அவர்களை விளித்து, "ஐயன்மீர்! வில்லுங் கையுமாய் வந்த வேடனொருவனைத் தாங்கள் இவ்வழி கண்டிருப்பீர்களே! அவன் யாவனோ?" எனக் கேட்டார். கேட்ட அவருக்கு, "வேடனா! அவன் நள்ளி

யூர் புரக்கும் வள்ளியோன் கண்டீரக்கோ அல்லனே!" என்று விடை கிடைத்தது.

முன்னிலும் பன்மடங்கு வியப்பு மிக எய்திஞர் ஏழைப் புலவர். சற்றுநேரம் அசைவற்று நின்றவிடத்திலேயே மரம்போல நின்ருர். பின்னர், வாய்விட்டு, "ஏ! தற்பெருமை இல்லாத் தண்ணளியோய்! நின் புகழ் மேன்மேலும் ஓங்கிப் பரவுவதாக! நின்னை யொத்த வேந்தர் இன்னும் பலர் இந்நாட்டிடை இருப்பாராயின், இத் தமிழ்நாடு துறக்கம் போன்றே பிறக்க மெய்தும். இதுகாறும் நின்னைக் காணுத என்கண்கள் புண்களே. உன் புகழ் பாடாத என் நாக்கு புண்ணுக்கே" என்று அரற்றினர். அரற்றியவர், தாயைத் தேடிப் பாய்ந்தோடும் கன்றே போன்று விரைந்து ஓடோடி வளவனை அடைந்து அவன் அடிகளில் வணங்கினர். வணங்கிய அவரை விரைந்தேற்ற கண்டீரக்கோ, அவரைத் தம்முடன் அரண்மனைக்கு அழைத்துச் சென்று பின்னும் பல பரிசில்களை வழங்கினன். அவ் வள்ளியோன் புகழ் இன்றளவும் நின்று நிலவுகிறது.

---

## 6. அலைகடல் அளித்த அரசிளங்குமரன்

கிள்ளிவளவன் என்ற சோழ அரசன் ஒருவன் காவிரிப்பூம் பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு அரசு புரிந்துவந்தான். குடிமக்கள் நலம் ஓம்புவதில் அவனுக்கு இணையான வேறு அரசர்கள் அவன் காலத்தில் இல்லையென்று கூறலாம். கண்களை இமைகள் காப்பதுபோல அவன் தன்னுடைய குடிகளைக் காத்துவந்தான். உண்மையும் உயர்ந்த நல்லொழுக்கமும் வாய்ந்தவன் அம்மன்னன்; பகைவர்களுக்கு அரிமா அனையான். நெடுமுடிக்கிள்ளி என்றும் அவனுக்கு மற்றொரு பெயர் உண்டு.

ஒருநாள் மாலை அவன் காவிரிப்பூம் பட்டினத்துக் கடற்கரையருகில் இருந்த சோலையொன்றில் உலாவிக்கொண்டிருந்தான். உலாவிக்கொண்டே சிறிது தொலைவு அவன் அச்சோலையினூடு சென்ற பொழுது, அவன் முன்னர் அழகு மிக்க இளமங்கை ஒருத்தி எதிர்ப்பட்டாள். ஒப்பற்ற அழகுவாய்ந்த அம்மங்கையைக் கண்டதும் அரசன் அப்படியே வியப்புடன் சற்றுநேரம் நின்றுவிட்டான்; அம்மங்கையும் மடங்கலேறு அனைய அரசனைக் கண்டாள்: கண்டவள், அவன்றன் ஆண்மை நிறைந்த

தோற்றத்தில் ஈடுபட்டு, அச்சமும் நாணமும் வெளித்தோன்ற ஒருபுறம் ஒதுங்கி நின்ருள்.

ஒதுங்கிநின்ற அவளை அரசன் நெருங்கிஞன். அவள்மீது தான் காதல் கொண்டதைப் பணிவான மொழிகளால் தெரிவித்தான். குறையிரந்துநின்ற மன்னன்றன் வடிவழகையும் உயர்ந்த தோற்றத்தையும் மங்கை மற்ருெருமுறை தன் கடைக்கண்களாற் பார்த்தாள். அவனை மணக்கத் தான் இசைந்ததைப் புன்முறுவலால் அறிவித்தாள். அன்று முதல் அவளும் அரசனும் அதேயிடத்தில் நாடோறும் கூடிக்குலவி வந்தார்கள். மங்கைதன் எழிலில் மயங்கி யிருந்த மன்னன் அவள் யார் எங்கிருப்பவள் என்பனவற்றைக்கூடக் கேட்டறியவில்லை; மங்கையும் தாஞக வலியக் கூறிஞளில்லை. இந்நிலையிலேயே அவர்களுக்குள் அரசர்க்குரிய காதல் மணம் நிறைவேறிற்று.

II

கிள்ளிவளவன் காலத்தில், நாகநாட்டை வளைவணன் என்ற அரசன் ஆண்டுவந்தான். அவனுக்கு ஒப்புயர்வற்ற அழகுவாய்ந்த மகளொருத்தி இருந்தாள்; அவள் பெயர் பீலிவளை. கடற்பயணஞ்சென்று பிற நாடுகளைச் சுற்றிப் பார்ப்பதில் வளைவணனுக்குப் பெருவிருப்பம்.

ஆகவே, ஒருமுறை பீலிவளையுடனும் தன் மனைவியுடனும் அவன் கப்பலில் நெடும் பயணம் புறப்பட்டான். புறப்பட்டவன், நாடுகள் பலவற்றைப் பார்த்துக்கொண்டு சோழன் தலைநகராகிய காவிரிப்பூம் பட்டினத்தை அடைந்தான். தான் இன்னான் என்பதை எவரும் அறியக் கூடாது என்ற முடிவுடன் வந்திருந்த நாகவரசன் ஊரினுட் சென்று தங்க விரும்பவில்லை; ஆகவே, கப்பலையே தங்குமிடமாக வைத்துக் கொண்டான். அங்கிருந்து அவன் தன்னைச் சேர்ந்தவர்களுடன் வணிக மக்களைப்போல் உருமாறி ஊரினுட் சென்று சுற்றிப் பார்ப்பதும், கப்பலுக்குத் திரும்பி விடுவதுமாக இருந்து வந்தான். பீலிவளையும் பாங்கியர்கள் எவருமின்றித் தனியாகவே கடற்கரையை அடுத்த சோலைகளில் உலவி வருவாள். இவ்வாறு உலவிவந்த ஒரு நாள் மாலையிலேதான் அவள் கிள்ளிவளவன் முன் எதிர்ப்பட்டதும், பின்னர் அவனைக் காதல் மணம் புரிந்துகொண்டதுமாகும்.

காதல்மணச் செய்தியை ஏற்ற சமயம் பார்த்துத் தன் பெற்றோர்களிடம் தெரிவிக்கவேண்டுமென்று பீலிவளை நினைத்திருந்தாள். எனினும் அத்தகைய சமயம் எளிதில் அவளுக்கு வாய்க்கவில்லை ; ஒவ்வொரு நாளாகக் கழிந்துகொண்டிருந்தது. இன்று எப்படியுந் தெரிவித்துத் தீர்

வது என்று அவன் முடிவுகட்டிக்கொண்டு ஒரு நாள் தன் பெற்றோரிருந்த இடஞ் சேர்ந்தாள். அப்போது நாகநாட்டிலிருந்து கப்பலொன்று விரைந்துவந்து அரசன் கப்பலை அணுகிற்று. வந்த கப்பலின் தலைவன்விரைந்து அரசன்முன் வந்து, மண்டியிட்டு, "அரசே! தங்கள் நாட்டைப் பகைவர்கள் சூழ்ந்துகொண்டு முற்றுகையிட்டுள்ளார்கள். நொடியுங் காலந்தாழ்த்தாமற் புறப்பட்டுவந்தால் மட்டுமே நாட்டை மீட்க முடியும்," என்று பகர்ந்தான். வளைவணன் கப்பல் மறுநொடியிலேயே பாயை விரித்து நாக நாடு நோக்கிப் புறப்பட்டு விட்டது. எனவே தந்தையாரிடம் தான் மணஞ்செய்துகொண்டதைத் தெரிவித்துக்கொள்ளப் பீலிவளைக்குச் சமயம் நேராதுபோயிற்று; அதுமட்டுமா? காதல் மணம் புரிந்துகொண்ட கணவனைக்கண்டு விடைபெறவும், தான் இன்னாள் என்று உண்மை தெரிவிக்கவும் வசதி வாய்க்காமற்போயிற்று.

III

சில நாட்களில் வளைவணன் கப்பல் நாக நாடு சேர்ந்தது. கப்பலைவிட்டு இறங்கிய அரசன், பகைவர்கள் ஊரை வளைத்துக்கொண்டிருப்பதைக் கண்டான் ; எனினும், உளந்தளராமல் அரண்மனையை யடைந்து, வெற்றிபெறுதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தான். அல்லும்

பகலும் அவன் ஓயாது முயன்று பல திங்களாகப் பெரும்போர் இயற்றினான்; இயற்றி, இறுதியில் பகைவர்களைப் புறங்காட்டி ஓடச்செய்தான்.

இதற்குள், பீலிவளை தான் காவிரிப்பூம்பட்டினத்திற் சோழமன்னனைக் காதல்மணம்புரிந்து வந்திருந்த செய்தியைத் தன் தாயிடம் தெரிவித்தாள்; தான் கரு வாய்த்திருந்ததையும் குறிப்பாகத் தெரிவித்தாள். தாயும் இயல்பாகவே இச்செய்திகளை வளைவணனிடம் தெரிவித்தாள். சோழனுடன் மணவினைத் தொடர்பு உண்டாக நேர்ந்தது நலமென்றே கருதினான் நாகமன்னன். ஆகவே, தான் மேற்கொண்டிருந்த போர்வினை முடிந்து வெற்றிபெற்றவுடன் பீலிவளையை அவளுடைய காதலனிடம் சேர்ப்பிப்பதாக உறுதி கூறினான்.

காவிரிப்பூம் பட்டினத்திலோ, நாகநாட்டுக் கப்பல் ஊர் திரும்பிச்சென்ற மறுநாளும், வழக்கம்போலவே தன் காதலியைப் பார்த்துப்போகக் கருதி, கிள்ளிவளவன் கடற்கரைச் சோலைக்குவந்தான். வந்தவன் சோலைமுழுதுந் தேடியும் அவளைக்காணப்பெறாது மிகவும்வருந்தினான். அவள் யார் எந்த ஊர் என்றுகூடத் தான் கேட்டறியாததை நினைந்து நினைந்து வெட்கினான்; எனினும், சோலைக்குமட்டும் நாடோறும் விடாமற் சென்று பார்த்துவந்தான். இவ்வாறு ஒருநாள்

வந்திருந்து திரும்புகையில் புத்தமதத் துறவி ஒருவர் அவன் முன் எதிர்ப்பட்டார். எதிர்ப் பட்டவர், அரசனது முகவாட்டங் கண்டு மன மிரங்கிக் காரணம் யாதென வினவினார். அர சன் நடந்தவற்றை நடந்தவாறு அவரிடங்கூறி னான். அதுகேட்ட துறவி அம்மங்கை நாகநாட் டரசன் மகள் பீலிவளையே என்றும், அவள் தன் தந்தையுடன் நாடு திரும்பினாளென்றும் எடுத்து இயம்பித் தம் வழியே சென்றார்.

மறுநாள் கிள்ளிவளவன், பீலிவளையை அடையும்வழி யாதென்று அரண்மனையிலிருந்த வண்ணம் எண்ணமிட்டுக்கொண் டிருந்தான். அப்பொழுது, நாகநாட்டிற்கு வாணிகஞ் செய் யப்புறப்பட்டவனான கம்பளச்செட்டி என்ற வணி கன் ஒருவன் அரசனிடம் விடைபெற்றுப்போக வந்தான். அவன் பயணம் புறப்பட்ட செய்தி யைக் கேட்ட அரசன், குருடனுக்குக் கோல் கிடைத்ததுபோற் பெருமகிழ்வு எய்தினான். உடனே, வளைவணனுக்கு ஓலையொன்று எழுதி அந்தச் செட்டியினிடம் கொடுத்து நாகநாட்டர சனிடம் கொடுக்குமாறு கட்டளையிட்டான். அவ் வோலையில் கடற்கரைச் சோலையில் பீலிவளையை அவன் எதிர்ப்பட நேர்ந்ததையும், அவள்மீது காதல் கொண்டதையும், பின் இருவரும் காதல் மணம் செய்துகொண்டதையும் எடுத்துரைத்து,

விரைவில் தனக்கு அவளை மணமுடித்துவைக்கு மாறு அவன் கேட்டு எழுதியிருந்தான்.

IV

நாகநாட்டில் வளைவணன் எதிரிகளை வென்று புறங்காட்டி ஓடச்செய்த சமயம், பீலி வளை அழகிற்சிறந்த ஆண்குழந்தையொன்றைப் பெற்றாள். ஆனால், பெற்ற அக் குழந்தையை அவள் தூக்கிப் பாலூட்டிச் சீராட்டுவதற்கில்லை. கருவுயிர்த்த அறையிலேயே அவள் தன் காதற் கணவனைக் கருத்தில் நினைத்தவண்ணம் உயிர் துறந்தாள். அதனால் அவள் தந்தை தாயார் கொண்ட துன்பத்திற்கு அளவே இல்லை. அவ ளுக்கு உறுதி கூறியவாறு அவளைச் சோழனி டம் சேர்க்கமுடியாது போய்விட்டதை நினைந்து நினைந்து வளைவணன் ஏங்கினான். ஏங்கி என்ன பயன் ?

பீலிவளையின் மைந்தன் நாளொரு மேனி யும்பொழுதொரு வண்ணமுமாக வளர்க்கப்பட்டு வந்தான். அவனுடைய அழகும் அறிவும் அவன் தாயை அடிக்கடி நினைவூட்டுவனவா யிருந்தன. அவன் விளையாட்டைக் கண்டு வளை வணனும் அவன் மனைவியும் ஒருவாறு மகளை இழந்த கவலை மாறியிருந்தார்கள். இவ்வாறாக ஐந்தாண்டுகள் கழிந்தன.

சோழநாட்டிலிருந்து ஓலையுடன் புறப்பட்ட கம்பளச் செட்டி நாகநாடு வந்து சேர்ந்து நாக மன்னனிடம் ஓலையைச் சேர்த்தான். ஓலையைப் பிரித்துப்படித்த அரசன், கண்களில் நீர் ததும்ப, தன் மகள் பீலிவளை இறந்துவிட்ட செய்தியைச் செட்டிக்கு அறிவித்தான். பின்னர், குழந்தையை அழைத்துக் கம்பளச் செட்டியிடம் ஒப்புவித்துச் சோழனிடம் அதனைக் கொண்டு சேர்க்குமாறு வேண்டினான். செட்டியும் நல்லதென்று அரசன் வேண்டுகோட்கிசைந்து சிறுவனுடன் நாக நாட்டைவிட்டுப் புறப்பட்டான். புறப்பட்டவன் சில திங்கள் பயணம் செய்து வந்து ஒருநாள் மாலையில் காவிரிப்பூம்பட்டினத்தை நெருங்கினான். கடற்கரையிலிருந்து ஒளி வீசிக்கொண்டிருந்த கலங்கரை விளக்கத்தால், அண்மையில் தெரிவது காவிரிப்பூம் பட்டினந்தான் எனச் செட்டி கண்டுகொண்டான்.

அவ்வேளை, எதிர்பாரா வண்ணம் பெருத்த புயற்காற்று வீசிற்று. கடலில் அலைகள் ஒவ்வொன்றும் ஒரு தென்னைமர உயரம் கிளம்பியது. செட்டியின் கப்பல் அப்புறமும் இப்புறமும் சாய்ந்து சாய்ந்து நிமிர்ந்தது. சற்று நேரத்தில், புயற்காற்று மிகவும் கடுமையாக வீசவே அக்கப்பல் தலைகீழாகக் கவிழ்ந்தது. கப்பலிலிருந்

தோரில், இறந்தவர் ஒரு சிலர் போக, ஒரு சிலர் தட்டுத்தடுமாறிக் கரைசேர்ந்தனர். அவ்வாறு கரை சேர்ந்தவர்களிற் கம்பளச் செட்டியும் ஒருவன். அவன் உடனே அரண்மனையடைந்து, கிள்ளி வளவனிடம் வரலாற்றனைத்தையும் தெரிவித்துக் கடும்புயலில் இளஞ்சிறுவன் என்ன ஆனானோ தெரியவில்லை என்று கண்ணீரும் கம்பலையுமாய்க் கூறி முடித்தான்.

நெடுநாள் ஆவலுடன் எதிர்பார்த்திருந்த தன் மனைவி இறந்தொழிந்ததையும், அவள் பெற்ற அருமந்தபிள்ளை கடலிடைப்பட்டதையும், கேட்ட கிள்ளிவளவன் பெருந்துயரக் கடலில் ஆழ்ந்தான். கடலில் மூழ்கிய தன் மைந்தன் ஒருகால் எங்காவது கரையில் ஒதுக்கப்பட் டிருக்கவுங் கூடும்; அப்படி ஒதுங்கிக் கிடந்தால் அவன் உடலையாவது காணலாமே என்ற எண்ணம் அவனுக்கு உதித்தது. மன்னன் உடனே கடற்கரையை அடைந்து கடலோரமே தேடிக் கொண்டு சென்றான். பிள்ளையைக்காணும் விருப்பத்தால், தேடிப் புறப்பட்ட அம்மன்னன் பின்னேயே அவ்வூர் மக்களிற் சிலரும் தொடர்ந்து சென்றார்கள்.

அரசன் இவ்வாறு சென்றுவிடவே, சித்திரைத் திங்கள் முழு நிலாநாளில் அந்நகரில் ஆண்டுதோறும் நடைபெற்றுவந்த இந்திரவிழா,

அவ்வாண்டு நின்றுபோயிற்று. அதனால், அவ் விழாவிற்குரிய இந்திரன் சினங்கொண்டு சீறினான். "காவிரிப்பூம் பட்டினத்தைக் கடல்



கொள்க!" என்று கட்டளையிட்டான். அவ் வண்ணமே கடல் பொங்கி எழுந்து மேல்வந்து அந் நகரையும் அதன் சுற்றுப் புறங்களையும் அழித்துவிட்டது.

மனைவியை இழந்து, மகனைப்பறிகொடுத்து அலைந்து திரியும் கிள்ளிவளவனுக்குத் தன் தலைநகர் அழிந்த செய்தியும் எட்டியது. ஆனால், அவன் அதை ஒரு பொருட்டாய்க் கருதவில்லை. கொண்ட நோக்கத்தைக் கைவிடாமற் கரையோரம் தேடிக்கொண்டே சென்றான். இறுதியில், நாகபட்டினத்தருகில் வந்தபோது அவன் நோக்கம் நிறைவேறிற்று. ஐந்தாண்டுக் குழந்தையொன்று தொண்டைக் கொடிகளாற் சுற்றப் பட்டுக் கரையில் ஒதுங்கிக் கிடந்தது. அதுகண்டு அரசன் ஆவலோடு ஓடி அதனைக் கையில் தூக்கிப் பார்க்க, குழந்தை உயிருடனிருக்கக் கண்டான். ஆ! அரசன் கொண்ட மகிழ்ச்சியை அளவிட்டுக் கூறமுடியுமோ?

அரிதில் அடைந்த மகனை அணைந்துச் சேர்த்துக்கொண்டு அரசன் நாகபட்டினஞ் சேர்ந்தான். சேர்ந்தவன் அவ்வூரையே தலைநகராகக் கொண்டு அங்கேயே அரண்மனையொன்று கட்டிக்கொண்டான். அலைகடல் அளித்த அரசிளங் குமரனுக்கு இளந்திரையன் என்று பெயரிட்டான். தொண்டைக் கொடியாற் சுற்றப்பட்டுக் கிடந்து அகப்பட்டபடியால் அச் சிறுவன் பிற்காலத்தில் தொண்டைமான் இளந்திரையன் என்றும் அழைக்கப்பட்டான்.

---

# 7. ஆட்டனத்தியும் ஆதிமந்தியும்

சோழ நாட்டிலுள்ள காவிரிப்பூம் பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு, கரிகாற் சோழன் என்ற அரசனொருவன் அரசுபுரிந்து வந்தான். அவன் காலத்திலே சோழநாடு நிலவளத்தினும் நீர்வளம் மிகுந்து பெருஞ்செழிப்புடன் திகழ்ந்தது, அதனால் அந் நாட்டிற்குப் 'புனல் நாடு' என்றே ஒரு பெயரும் இருந்தது. அத்தகைய நீர் வளத்திற்குக் காரணமாயிருந்தது, பொன் கொழிக்குங் காவிரியாறேயாம். அக் காவிரி சோணாட்டூடே பாய்ந்து, காவிரிப்பூம்பட்டினத்திற் கடலொடு கலப்பதாகும். காவிரித் தண் புனலாற் செழிப்பும் மேன்மையும் பெற்று ஓங்கிய நாட்டைப் புரந்த கரிகாலன், ஒவ்வோராண்டும் காவிரியிற் புதுப்புனல் பெருகி வருங்காலை, "புதுப் புனல்விழா" என்ற விழாவொன்று கொண்டாட ஏற்பாடு செய்தான்.

அவ் விழாவன்று சோணாட்டு மக்கள் எல்லோரும் அதில் முழுமனதுடன் கலந்துகொள்வார்கள். பொன்னும் பொருளும் பூவுங்கொண்டு மகளிர் கூட்டங் கூட்டமாகக் காவிரிக் கரையை அடைவார்கள். அவர்தங் கணவன்மார்களும்

நல்லுடை உடுத்துப் பெருங்களிப்புடன் உடன் செல்வார்கள். யானைகள்மீது வருவார் பலர்; வண்டிகளில் வருவார் பலர்; சிவிகையூர்ந்து செல்வார் பலர்; கால் நடையாகவே காவிரியடைவார் கணக்கிறந்த மக்கள். இவ்வாறு புதுப் புனல் விழாவன்று காவிரிக் கரையெங்கும் மக்கட் பரப்பாகவே மிளிரும். இத்தகைய சிறந்ததொரு கொண்டாட்டத்திற்கு வழி செய்த கரிகாலனை மக்கள் வாயார வாழ்த்தி வந்தார்கள்.

கரிகாலனுக்கு ஆதிமந்தி என்னும் பெண் ஒருத்தி இருந்தாள். அழகிலும் அறிவிலும் சிறந்த அம்மகவை அவன் தன் கண்ணிற் கருமணியினும் அரிதாகக் கருதிப் பாராட்டி வளர்த்து வந்தான்; தேர்ந்த ஆசிரியர்களைக் கொண்டு அவளுக்குச் சீரிய முறையிற் கல்வி பயிற்றுவித்தான். விரைவில், அவள் சொல் வளமும் பொருள் வளமும் பொருந்தச் செய்யுள் யாக்கும் ஆற்றலும் பெற்றாள். கல்வியிலேமட்டு மன்றி நல்லொழுக்கத்திலும் அவள் சிறந்து விளங்கினாள். பூமகளும் நாமகளும் ஒருங்கே கூடினாலொத்த பொற்புவாய்ந்து இலங்கிய அப் பெண்மணிக்கு ஆண்டு பதினாறு நிரம்பியது. எனவே அவளுக்கேற்ற கணவனைத் தேடி மண

முடிப்பதற்கு வேண்டிய முயற்சிகளைக் கரிகாலன் செய்துக்கொண்டிருந்தான்.

அக்காலத்தில் மலையாள நாட்டை ஆட்டனத்தி என்னும் பெயருடைய அரசனொருவன் ஆண்டு வந்தான். அவனுடைய தலைநகரம் தோண்டி. ஆட்டனத்தி, கண்டார் விரும்புங் கட்டழகு படைத்தவன், அறிஞரும் மெச்சும் அறிவு வாய்ந்தவன் ; கல்வியைக் கசடறக் கற்றவன் ; வேங்கைப் புலியினுஞ் சிறந்த வீரம் படைத்தவன். அத்தகைய இளங்காளைக்குக் கடலில் நீந்தியாடுவதிற் கரைகொளா விருப்பம். நீரிலே பிறந்ததொரு மீனைப்போன்றே அவன் ஆறுகளிலும் கடலிலும் மூழ்கியும் நீந்தியும் திளைத்து வருவான்.

ஒருநாள் அவன் சோழநாட்டிலிருந்து வந்த சிலர் வழியாக ஆதிமந்தியின் சிறந்த அழகையும் பரந்த அறிவையும்பற்றிக் கேள்வியுற்றான். அத்தகைய மங்கையைத் தான் மணம் புரியவேண்டும் என்று உடனே முடிவு செய்து கொண்டான் ; தன்னுடைய அமைச்சர்களை அழைத்தான் ; அழைத்து, விரைந்து சென்று சோழன் சம்மதத்தை கேட்டுவரப் பணித்தான்.

அரசனிட்ட கட்டளைப்படி அமைச்சர்களிற் சிலர் காலந்தாழ்த்தாது புறப்பட்டுக் காவிரிப்பூம் பட்டினம் வந்தடைந்தார்கள். அவர்கள் சோழன் அவைக்களத்தை அடைந்து மன்னனிடம் தாம் வந்தது எதற்கென விளக்கமாகக் கூறினார்கள். ஆட்டனத்தியின் அரும் பெரும் சிறப்புக்களை முன்னரே அறிந்திருந்த கரிகாலன் உடனே தன் மகளை அழைத்தான் : அழைத்து, அவளுக்குச் சேரனை மணக்க விருப்பமுண்டா என்று உசாவினன். அவள் எதிரொன்றுங் கூறுமலிருக்கவே, உளமிசைந்தாள் என ஊகித்துக்கொண்டு மணமுடிக்க ஒப்புக்கொண்டதாக மலையாள மன்னனுக்குச் செய்தி அனுப்பினன்.

II

செய்தி கிடைத்த சேரன் அடங்கா மகிழ் வெய்தினன். மணக்கோலம் பூண்டு சீர்வரிசைகள் சிறக்க அவன் விரைவிற் காவிரிப்பூம்பட்டினம் வந்தடைந்தான். மலை நாட்டிலும் சோனாட்டிலும் இருந்த சிற்றறசர்கள் பலரும் மணவிழாவைக் காணவந்து குழுமினர்கள். மகர தோரணங்களாலும், கொடிச் சீலைகளாலும் பல வகையான ஓவியங்களாலும் நிறைந்திருந்த கரிகாலனது அரண்மனை பொன்னுடு எனப்

பொலிவுற்று இலகியது. அரண்மனை வாயில் தென்னை, கமுகு, ஈந்து முதலிய மரங்களாலும், அவற்றின் குலைகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. முத்து மாலைகளும், பட்டுச் சீலைகளும், பூத் தொங்கல்களும் மணமேடையை அழகு செய்தன. மங்கல வாச்சியங்கள் எங்கும் முழங்கின. அந்தணர் பலர்கூடி மங்கலச் சடங்குகளைச் செய்துவந்தனர். குறித்த நல்வோரையில் ஆட்டனத்திக்கும் ஆதிமந்திக்கும் திருமணம் சிறப்பாக நிறைவேறியது. மணமக்கள் இருவரும் எழுந்து அவண் குழுமியிருந்த பெரியோர்களை வணங்கினார்கள். பொன்னும் பூவுங் கலந்த மங்கல அரிசி அவர்கள்மீது தூவப்பட்டது. பலரும் வாழ்த்திய வாழ்த்தொலிகட்கிடையே மணமக்கள் எழுந்து மணவறை புக்கனர். தோழியர் ஆலஞ்சுற்றிக் கண்ணூறு கழித்தனர்.

இவ்வாறு சிறப்பாக மண முடிக்கப்பட்ட ஆட்டனத்தி சில நாட்கள் கழிந்த பின் மனைவியுடன் தொண்டி நகருக்குப் புறப்பட்டான். புறப்படுமுன் அவ்வாண்டு வரவிருக்கும் புதுப் புனல் விழாவிற்கு ஆதிமந்தியுடன் வருவதாக அவன் கரிகாலனுக்கு உறுதி கூறியே புறப்பட்டான்.

III

புதுப்புனல் விழா நாளும் வந்தது. உறுதி மொழி கூறியதற்கேற்ப மணமக்கள் இருவரும் காவிரிப்பூம்பட்டினம் வந்து சேர்ந்தனர். விழா நாளன்று அவ்விருவரும் அழகிய தேரொன்றின்மீது அமர்ந்து காவிரிக் கரையை அடைந்தனர் அடைந்து, காவிரியை முறைப்படி வணங்கி நீரில் இறங்கினார்கள். நீரிற் குடைந்தாடுவதில் வல்லவனான ஆட்டனத்தி மூழ்கியும், நீந்தியும், மல்லாந்தும், மிதந்தும் பலவகையாக விளையாடலானான். அவன்மீது வைத்த கண்ணை எடுக்காமல் ஆதிமந்தியும் ஒருபுறம் நீரில் நின்றபடியே அவன் ஆற்றலைக் கண்டு வியந்துகொண்டிருந்தாள்; இடையிடையே, தன் இரு கைகளாலும் அவள் புதுப்புனலை வாரி, விளையாடும் தன் கணவன்மீது இறைத்து மகிழ்ந்து வந்தாள். அவ்வாறிருக்கையில், ஒருமுறை நீருள் மூழ்கிய ஆட்டனத்தி மீண்டும் வெளிவராமல் மறைந்தே போனான்.

அதுகண்ட ஆதிமந்தி திடுக்கிட்டு அயர்ந்தாள்; செய்வது இன்னதென்று தெரியாது திகைத்தாள்; அங்கும் இங்கும் நீரிலே தேடினாள். அவளுடைய தோழிகளும் வேலையாட்களும் அங்கங்குந் தேடினர். ஒருகால், அவன்

சிறிது தொலைவு நீரினுள்ளாகவே நீந்திச் சென்று கரையேறி மக்கட் கூட்டத்தில் கலந்து கொண்டானோ என்ற ஐயம் ஒன்று ஆதிமந்திக்கு உண்டாயிற்று. உடனே. கரையேறி மேல் வந்து கடல்போற் பரந்திருந்த மக்கள் கூட்டத்திற் புகுந்து எங்குந் தேடலானாள். எங்குத்தேடியும் அவன் அகப்படவில்லை. மருமகன் நீரினுள் மூழ்கி மறைந்த செய்தி கரிகாலனுக்கு எட்டிற்று. வீரர்கள் பலரை அவன் ஏவி, நாடெங்குந் தேடச் செய்தான். ஆனால், ஆட்டனத்தி போன வழி தெரியவில்லை.

ஆதிமந்திக்கோ, தன் கணவனுடைய ஒப்பற்ற அழகையும் ஆற்றலையும் நோக்கிக் காவிரியாறே அவனைக் கடலிலிழுத்துச் சென்று ஒளித்து வைத்திருக்கவேண்டும் என்ற எண்ணம் தோன்றிற்று. தோழியர் சிலருடன் விரைந்து முன் நீராடிய துறைக்குச் சென்றாள். சென்றவள் அங்கிருந்து கரையோரமாகவே கடலை நோக்கி நடந்த வண்ணம் கணவனைத் தேடிக் கொண்டே போனாள். இதற்குள், அவ்வூர் மக்கள் பலர், ஆற்றொணாத் துயர்கொண்டு அலையும் அவளைப் பின்தொடர்ந்து கூட்டங்கூட்டமாய்ச் செல்வாராயினர்.

முடிவில், ஆதிமந்தி கடற் கரையை அடைந்தாள். அங்கும் தன் கணவனை அவள்

காணவில்லை. செய்வது இன்னதென்று தெரியாத வளாய், "மலைபோன்ற தோள்களையும், மார்பினை யும் படைத்த மன்னுவோ!" என்று எட்டின மட்டும் உரக்கக் கூவினுள். என்ன விந்தை!



கடலின் அலைகளுக்கிடையே இருந்து ஆட்ட னத்தி விரைந்து தாவிக்கொண்டு வந்து ஆதி மந்தியைத் தழுவினுன். பின்தொடர்ந்து வந்த மக்களும், அரசர் முதலாயிஞேரும் இது கண்டு பெருவியப்பு எய்திஞர்கள். அன்றுதொட்டு

ஆதிமந்தியும் ஆட்டனத்தியும் நகமும் தசையும் போல் உளமொத்து வாழ்ந்து வந்தனர்.

---

# 8. பெருங்கோப் பெண்டு

மதுரை என்னும் மாநகரிலே ஓர் அரசன் இருந்தான். அவன் பெயர் பூதப் பாண்டியன். அவன் தன் குடிமக்களைக் கருத்துடன் பாது காத்துவந்தான். போர்புரிவதில் மிக வல்லவ னை அவன் படைகளைத் திறம்பட நடத்துவ தில் நல்ல தேர்ச்சியடைந்திருந்தான். பகையர சர்கள் அவன் பெயரைக் கேட்டாலே நடுங்கு வார்கள். அவனுக்கு வெற்றி வீரர்களாகிய நண் பர் சிலர் இருந்தனர். அவர்கள் முறையே,மையல் மாவன், எயில் ஆர்தை, அந்துவஞ் சாத்தன், ஆத னழிசி, இயக்கன் என்பவர்கள். பூதப் பாண்டி யன் கல்வியிலும் சிறந்திருந்தான். அதனால் அவன், புலவர்கள் பலரை ஆதரித்துக் காப் பாற்றி வந்தான். அப் புலவர்களுள், மதுரைப் பேராலவாயார் என்பவர் முதன்மையானவர்.

பூதப் பாண்டியனுக்கு அன்பிற் சிறந்த மனைவி ஒருத்தி இருந்தாள். அவள் பெயர் பெருங்கோப் பெண்டு என்பதாம். அவள் அழ

கில் திருவை நிகர்த்தவள் ; அறிவில் கலைமகளை ஒத்தவள். செய்யுள் யாத்துப் பாடுவதிலும் அவள் திறமை வாய்ந்திருந்தாள். அவளுக்கு அரசாட்சியைக் குறித்த நுட்பங்களெல்லாம் நன்கு தெரியும். அதனால், அவள் தன் கணவனுக்கு அமைச்சனைப்போன்று பல சமயங்களில் உதவி வந்தாள். அவளுக்குத் தன் கணவனே தெய்வம்; அவனிருக்கும் இடமே கோவில். பாண்டியனும் அவளைத் தன் உடலில் ஒரு பாதியாகவே கருதி, அவளை விட்டுப் பிரியாது வாழ்ந்து வந்தான்.

பூதப் பாண்டியன் வீரர்களாகிய தன் நண்பர்களின் உதவியாலும், தனது வீரத்தாலும் பகைவர்களை வென்று அடக்கி வந்தான். அதனால் பாண்டி நாட்டில் அமைதி நிலவியது. பெருங்கோப்பெண்டும் அவ்வப்போது நாட்டுக்கு நலம் பயக்கக் கூடியவற்றை அவனுக்கு எடுத்துக் கூறி அவற்றைச் செய்யுமாறு தூண்டி வந்தாள். ஆகவே, குடிமக்கள் அரசனையும், அரசியையும் தம் தந்தைதாய்போற் கருதிப் போற்றிவந்தார்கள்.

'பிழைக்கிற பிள்ளையானால் பிறந்தவன்றே இறந்துவிடும்' என்று தமிழ்நாட்டார் வேடிக்கையாகக் கூறுவதுண்டு. அதைப் போன்ற, நல்லவர்கள் இவ்வுலகத்தில் நெடுநாள் தரிப்பதில்லை

என்றுங்கூறுவதுண்டு. அம்முறையில், ஒருநாள், பூதப்பாண்டியன் திடுமென நோய்கண்டு மாண்டான். அவனை இழந்த பெருங்கோப்பெண்டு இடிவிழப் பெற்ற இளமரம்போலச் சாய்ந்து வீழ்ந்தாள்; துன்பம் மிக உற்றுக் கதறினாள்; உருண்டாள்; புரண்டாள்;முகத்தே இருகைகளாலும் அறைந்துகொண்டாள்; சுவருடன்மோதிக் கொண்டாள்; தரையில் முட்டிக்கொண்டாள். மாண்ட மன்னன் மீண்டும் உயிர்பெறவில்லை.

பாண்டியன் உடல் சுடுகாட்டிற்குக்கொண்டு போகப்பட்டது. துயர மிகுதியினாலே தன்னை மறந்துநின்றபெருங்கோப்பெண்டும்பிணத்தைத் தொடர்ந்து போயினாள். சுடுகாட்டில் அடுக்கப் பட்டிருந்த கட்டைகளின்மீது பிணம் வைக்கப் பட்டது. பிணத்தின்மேலே சில கட்டைகளும் வறட்டிகளும் அடுக்கப்பட்டன. சற்றுநேரத்தில் நெருப்பும் வைக்கப்பட்டது. கட்டைகள் தீப் பற்றிக் கொழுந்துவிட்டு எரியத் தொடங்கின. அன்புநிறைந்த தன்கணவனது உடல் தீப்பற்றி வேவதைக் கண்டாள் அவ்வேழைக் கைம்பெண். துயரம் அவள் நெஞ்சை அடைத்தது. எரியும் நெருப்பிலே தானும் குதிக்க ஓடினாள்.

அப்பொழுது, அருகில் இருந்த அரசனின் நண்பர்களும், புலவர்களும், குடிமக்களும் அவ

ளைத் தடுத்து நிறுத்தினர்கள். நிறுத்தி, அவளா வது உயிருடனிருந்து, தங்களை நல்ல முறையில் ஆளவேண்டும் என்று அவர்கள் மிகவும் வேண் டிக்கொண்டார்கள். அதைக்கேட்ட அக்கற்பரசி,



"பெரியோர்களே! என்ன சொன்னீர்கள்? என்னை அன்புடன், 'கண்மணீ!' என அழைக்கும் அழகிய வாயும் ஆதரவுடன் அணைக்கும் அரு மையான கைகளும் அதோ பற்றி எரிகின்றன;

பாருங்கள்! அவ்வாறு எரிவதைப் பார்த்து விட்டுப் பாவி நான்எப்படி உயிர்தரித்திருப்பேன்! வாழ்விலும், தாழ்விலும் என் கணவனோடு ஒன்ருக வாழவேண்டிய எனக்கு இத் தீயும், தாமரைக் குளமும் ஒன்றேயல்லவா!" என்று கூறி விட்டுத் தட்டெனத் தீயிற் பாய்ந்தாள். பெரு நெருப்பு அவளையும் பற்றி எரித்து அவள் கணவனுடன் சேர்த்தது. இதைக் கண்ட அந்நாட்டு மக்கள் வியப்பு மிகுந்தவர்களாய், அவளையும் அரசனையும் மறவாமற் புகழ்ந்து கொண்டாடினார்கள்.

---

## 9. வசையஞ்சி வரங்கிடந்தவள்

காவிரிப்பூம்பட்டினத்திற்குப் புகார் என்று ஒரு பெயருண்டு. அப் புகாரில் மாலதி என்ற பார்ப்பனி ஒருத்தி இருந்தாள். அவள் அடக்கம், அன்பு, அறம், கடவுட்பற்று முதலிய நற்குணங்கள் படைத்தவள். அவள் கணவனும் நல்லொழுக்கமும் நற்குணமும் வாய்ந்தவன். அவர்களுக்கு மணமாகி நெடுநாளாகியும் பிள்ளையில்லாமல் இருந்தது. ஆகவே, மாலதியை மகப்பேறில்லா மலடி என்று அண்டையயலார் அழைக்கலாயினர். இது பொருத ஏழை மங்கையும் அவள் கணவனும் நோன்புகள் பல இயற்

றினர்; திருக்கோவில்கள் பலவற்றை நாடிச் சென்று வணங்கினர்; திருக்குளங்கள்பலவற்றில் முழுகி வந்தனர்; தம் ஆற்றலுக்கு இயன்றவளவு அறங்கள் பல செய்தனர்; பட்டினி கிடந்து பாயின்றி உறங்கினர். என்ன செய்தும் என்? பிள்ளைப்பேறு மட்டுங் கிட்டவில்லை.

அதுகண்ட மாலதி, கணவனுக்கு மறு மணம் செய்விப்பதைவிட வேறு வழியாற் பிள் ளைக்கலி தீராதென்று முடிவுசெய்தாள். செய்த முடிவுக் கேற்ப அவள் மற்றொரு பார்ப்பன மங் கையைத் தேர்ந்து அவளைத் தன் கணவனுக்கு மணஞ் செய்வித்தாள். நற்காலமாகப் புதிதாய் மணந்த அந்த மங்கைக்கு விரைவில் உரியகாலத் தில் ஆண்மகவு ஒன்று பிறந்தது. மாலதியின் மனம் குளிர்ந்தது. அக்குழந்தையை அவள் தான் பெற்ற குழந்தையாகவே கருதி,அன்புடன் சீராட்டி வளர்த்து வந்தாள். குழந்தையும் வளர் பிறையைப்போல நாடோறும் வளர்ந்து வருவ தாயிற்று.

இவ்வாறிருக்கையில், ஒருநாள் மாலை, குழந் தையின் தாய்,காவிரிக்கு நீராடச்சென்றாள். வழக் கம்போலக் குழந்தை மாலதியிடம் விளையாடிக் கொண்டிருந்தது. சற்றுநேரங் கழிந்தபின் பசி யினால் அக்குழந்தை அழுதது. உடனே மாலதி உட்சென்று சிறிது பசுவின்பால் கொண்டு

வந்து அதனைச் சங்கில் இட்டுக் குழந்தைக்குப் புகட்டினாள். ஊழ்வினையால் அப்பாலால் விக்கி அருமந்த குழந்தை ஆருயிர் நீத்தது. அது கண்ட மாலதிக்குஉடல் ஒருநிலைகொள்ளவில்லை. அன்பிற்சிறந்த குழந்தையை இழந்ததுயரம்ஒரு புறம்; மாற்றாள் குழந்தையை வேண்டுமென்றே மடிவித்தாள் போலும் என்று பிறர் வசை கூறுவரே என்ற ஏக்கம் ஒருபுறம். கணவனும், மாற்றாளும் வந்துகேட்டால் என்ன விடை அளிப்பதுஎன்பது அவளுக்கு விளங்கவில்லை. எனவே, இறந்த குழந்தையைக் கையில் தாங்கியவளாய் அவள் வீட்டைவிட்டு வெளியேறினாள்.

வெளியேறியவள் அருகிலிருந்த கற்பகக் கோட்டம் என்ற கோவிலுள் நுழைந்து, நினைத்ததைக்கொடுக்கும் கற்பகத்தருவைப் பணிந்தாள். பணிந்து குழந்தையை உயிர்ப்பித்துத் தரவேண்டினாள். ஆனால், அவள் கோரிக்கை நிறைவேறவில்லை.எனவே, அக்கோவிலைவிட்டு நீங்கி ஐராவதக்கோவில்சென்று அடைந்தாள் அங்கும்அவள் பயன் ஒன்றும் பெறவில்லை. இவ்வாறே பலதேவர்கோவில்,சூரியன்கோவில்,முருகவேள்கோவில் சிவன் கோவில், இந்திரன் கோவில், அருகன் கோவில், சந்திரன் கோவில் முதலிய பல கோவில்களிற் புகுந்து புகுந்து வேண்டினாள். எந்தத் தெய்வமும் அவளை ஈடேற்றவில்லை. முடிவில்,

அவள் சாத்தன் கோவிலுக்குள் புகுந்து, குழந்தையை உயிர்ப்பித்தாலன்றி அக் கோவிலைவிட்டு வெளிச்செல்வதில்லை என்று கூறி, வரங்கிடந்தாள்.

இதற்குள் இராப்பொழுதும் வந்து எங்கும் இருள் சூழ்ந்தது. சாத்தன் கோவிலுக்குப் பக்கத்தேயிருந்தசுடுகாடொன்றில் ஓர் இடாகினிப்பேய் வாழ்ந்திருந்தது. அப் பேய், கோவிலுள் குழந்தையின் சவத்துடன் மாலதி வந்திருப்பது உணர்ந்து அழகிய பெண் வடிவுகொண்டு அக் கோவிலுக்குவந்தது. வந்துமாலதியைவிளித்து, "குற்றமற்ற குணவதியே! முற்பிறப்பில் தவஞ் செய்யாதவர்களுக்கு இப்பிறப்பில் தேவரும்வரங் கொடார். என் வீணே வருந்துகின்றனை. ஐயோ! பாவம்! மிகவும் இளங்குழந்தை. இப்படிக் கொடு பார்க்கலாம்" என்று கேட்டது. மாலதியும் குழந்தையைக் கொடுத்தாள். உடனே குழந்தையை அப் பேய் ஒரே விழுங்காய் விழுங்கிவிட்டது.

என் செய்வாள் பார்ப்பனி! தேவர் கோவிலிலேயே பேயிடம் பிள்ளையைப் பறிகொடுத்த அவள், அலறிப் புலம்பினள். அவள் புலம்பொலி பொறுத சாத்தன் உடனே அவள் முன் தோன்றினன். தோன்றி, "பெண்ணே! வருந்தாதே: உன் குழந்தையை நான் உயிர்ப்பித்துத் தருகிறேன். நீ உடனே வீடு திரும்பு. வழியி

லிருக்கும் பூஞ்சோலையில் உன் குழந்தையைக் காண்பாய்" என்று மொழிந்தான். மாலதியும் உடனே விரைந்து வீடு திரும்பினாள்.

வரங்கொடுத்த சாத்தன் இறந்த குழந்தையின் வடிவுகொண்டு பூஞ்சோலையிடத்தே கிடந்தான். அவ்வழி விரைந்து வந்த மாலதி அத்தெய்வக் குழந்தையைக் கண்டு மனமகிழ்ந்து அதனை வாரி அணைத்துக்கொண்டு வீட்டிற்கு ஓடினாள்.

---

கழக வெளியீடு - க௫அ

# செந்தமிழ் நாட்டுச்
# சிறுகதைகள்

○

தமிழ்ப்புலவர்

திரு. அ. நடராச பிள்ளையவர்கள்

எழுதியன

Approved by the Text Book Committee
for Non-detailed study vide Fort St. George gazette
Page 5, dated 14—5—46.

: : திருநெல்வேலி, தென்னிந்திய : :

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி, : : : : சென்னை.

# முன்னுரை

இந்நூற் கதைகள் நம் பண்டைத் தமிழ் இலக்கியங்களிலிருந்து எடுக்கப்பெற்றன. இவை சிறுவர்கட்கு இன்பந் தரக்கூடிய முறையில், எளிய, இனிய உரைநடையில் எழுதப்பட்டிருக்கின்றன. இவற்றால், இளைஞர்கட்கு நகை, அன்பு, அறிவு, வீரம் முதலியன ஏற்படும் என்பதற்கு ஐயமில்லை. சிறுவர்கள், இளமையிலேயே, நம் பழந்தமிழ் நூல்களின் சிறப்பை உணர்தற்கு இந்நூல் பெரிதுந் துணை புரியும்.

அ. நடராச பிள்ளை.

# பொருளடக்கம்

செந்தமிழ் நாட்டுச்

# சிறு கதைகள்

## 1. தலையைக் கொடுத்த தருமப்பிரபு

### I

முதிரமலை என்ற ஊரிலே குமணன் என்னும் ஒரு தருமப் பிரபு இருந்தார். அவர் நல்ல குணங்கள் வாய்ந்தவர்; பெரும் பொருள் படைத்தவர்; ஏழைகளுக்கும், புலவர்களுக்கும் வேண்டும் உதவி புரிபவர். யாரும் பசித்திருக்கப் பொறுக்கமாட்டார். அவருடைய வீட்டில், இரவும் பகலும் அன்னக்கொடை நடந்துகொண்டே இருக்கும். நாடோறும் புலவர்கள் பலர் அவரிடத்தில் வந்து பரிசில் வாங்கிச் செல்வர். அவருக்கு ஏழைகளிடத்தில் மிகுந்த இரக்கம் உண்டு. ஏழைகளுக்கு வயிறு நிறைய உணவும், மடி நிறையப் பணமும் குமணப் பிரபுவால் கொடுக்கப்படும். அவர் புலவர்களைக் கண்டால், குல தெய்வம் போல் கொண்டாடுவார். அவர் புலவர்களுக்கு ஆபரணங்களும், பணங்களும், யானை குதிரை பல்லக்கு முதலிய வாகனங்களும் கணக்கு வழக்கு இல்லாமல் கொடுப்பார்.

இவருக்கு இளங்குமணன் என்ற ஒரு தம்பி உண்டு. அவன் இவருக்கு மாறான குணங்களை உடையவன். அவனுக்குப் பணத்தைச் செல வழிக்க மனம் வராது. அவன் பணத்தைப் புதைத்து வைக்கக் கூடிய பரம உலோபி. குமணப் பிரபு மேற்கண்டபடி பணத்தைச் செல வழிப்பது அவனுக்குப் பிடிக்கவில்லை. அதனால் அவன் ஒரு நாள் குமணப் பிரபுவோடு சண்டை செய்யலானான்: நல்ல குணங்கள் நிறைந்த குமணப் பிரபு, அவனுடன் வீணாகச் சண்டை செய்வதற்கு விரும்பவில்லை. இவர் வீடு, வாசல், சொத்துக்களை யெல்லாம் இளங்குமணனிடம் கொடுத்து விட்டார். இவர் பக்கத்திலுள்ள ஒரு காட்டிற்குப் போனார். அங்கே, இவர் ஓர் எளிய குடிசையில் வசித்துவந்தார்.

இளங்குமணன் சொத்துக்களை யெல்லாம் கைப்பற்றிக்கொண்டான். அவன் குமணப்பிரபு நடத்திய தான தருமங்களை யெல்லாம் நிறுத்தி விட்டான். அநேக ஏழைகளுக்குக் கொடுத்து வந்த சாப்பாடு அவனால் நிறுத்தப்பட்டது. அவன் தன்னிடத்தில் வந்த எல்லோரையும் கெட்ட வார்த்தைசொல்லித் திட்டினான். அதனால் அவ்வூர் மக்கள் அவனை வெறுத்து இகழ்ந்தார்கள். குமணப் பிரபுவை வாயார வாழ்த்தினார்கள்.

காட்டிலுள்ள குமணப் பிரபுவை அடிக்கடி போய்ப் பார்த்துவந்தார்கள். அவர்கள் குமணப் பிரபுவுக்கு வேண்டிய உணவுப் பொருள்களைக் கொடுத்துவந்தார்கள்.

அக் குடிகளுடைய இகழுரை இளங்குமணன் காதுக்கு எட்டியது. அவனுக்குக் கோபம் அதிகமாயிற்று. குடிகள் குமணப் பிரபுவைக் கொண்டாடுவது அவனிடத்தில் பொறாமையை உண்டாக்கிற்று. ஆகையால் அவன் குமணப் பிரபுவைக்கொல்ல முடிவு செய்தான். ஆயினும் தன்னுடன் பிறந்த அண்ணனைத் தானே கொல்வதற்கு அவன் மனம் இடங் கொடுக்கவில்லை. "தான் ஆடாவிடினும், தன் சதை ஆடும்" என்பது பழமொழி அல்லவா?

ஆதலால் அவன் குமணப் பிரபுவினுடைய தலையை வெட்டிக் கொண்டு வருகிறவர்களுக்கு ஆயிரம் பொன் பரிசு கொடுப்பதாக, ஊர்எங்கும் பறை அறைவித்தான். ஊர் மக்கள் இதைக் கேட்டு இளங்குமணனை இன்னும் மிகுதியாக இகழ்ந்தார்கள். அவர்களுக்கு அவன் முகத்தில் விழிப்பதற்குக்கூட விருப்பமில்லை.

## II

அந்தக் காலத்தில், பெருந்தலைச்சாத்தனார் என்று ஒரு புலவர் இருந்தார். அவர் நன்றாய்ப் படித்தவர்; பாட்டுப் பாடுவதில் மிகுந்த சாமர்த்தர்.

ஆனால், அவர் மிகவும் ஏழை. அவர் குடும்பம் இராப் பட்டினியும், பகல் பட்டினியுமாய்க் கிடந்தது. குமணப் பிரபு புலவர்களுக்கு நல்ல சன்மானம் கொடுப்பதாக அவர் கேள்விப்பட்டார். உடனே, அவர் முதிரமலை என்ற ஊர்க்குப் புறப்பட்டார். வழியில், அவருக்குப் பலவகைத் துன்பங்கள் உண்டாயின. கடைசியில் அவர் எப்படியோ முதிரமலை என்ற ஊருக்கு வந்துசேர்ந்தார். அங்கே, குமணப் பிரபு காட்டிற்குப் போனதும், இளங்குமணன் உலோபியாய் இருப்பதும் அவருக்குத் தெரிந்தன. அந்தோ! புலவர் என்ன செய்வார்? வீட்டிலோ வறுமை! திரும்பிப் போக வேண்டிய வழியோ தூரம் உடையது! இருந்தாலும், அவர் தம்முடைய மனத்தைத் தாமே ஒரு வழியாகத் தேற்றிக்கொண்டார். கொடுத்துக் கெட்டுப்போன குமணப் பிரபுவைக் கண்டாவது திருத்தி அடையலாம் என்ற ஆசை அவருக்கு உண்டாகியது.

ஆகையால், பெருந்தலைச் சாத்தனார் பக்கத்திலுள்ள காட்டிற்குப் போனார்; அங்கே எளிய குடிசையில் புல்தரையில் உட்கார்ந்திருந்த குமணப் பிரபுவைக் கண்டார். என்னவோ பிரபுவைக் கண்ட உடனே புலவர்க்கு உற்சாகம் உண்டாய் விட்டது. அதனால், அவர் குமணப் பிரபுவை நோக்கி ஒரு பாட்டுப் பாடினார். அந்தப் பாட்டில்

"ஏ! குமணப்பிரபுவே! நான் வறுமையினாலே மிகவும் வருந்துகின்றேன். என்னுடைய வீட்டில் சோறு சமைத்துப் பல நாள்கள் ஆகின்றன. அடுப்பில் காளான் முளைத்திருக்கின்றது; என் மனைவி சாப்பிட்டுப் பல நாள்கள் ஆய்விட்டன; அவள் எலும்பும் தோலுமாய் மெலிந்துபோய் விட்டாள்; என் கைப்பிள்ளை தாயினுடைய பாலில்லாத மார்பைச் சுவைத்துப் பசி தீராமல், அவளுடைய முகத்தைப் பார்த்து அழுதது; அவள் கலங்கிய கண்களுடன் என் முகத்தைப் பார்த்தாள்; நான் அதனைக் காணப் பொறுக்காமல், உன் முகத்தைப் பார்க்க வந்தேன். நீயோ உன் சொத்துக்களை எல்லாம் இழந்து, துன்பத்துடன் இருக்கிறாய்! இருந்தாலும் நீ புலவர்களுடைய வறுமையை ஒழிக்கும் உயர்குடியில் பிறந்தவன். ஆகையால், நீ என்னை வெறுங் கையோடு அனுப்பமாட்டாய் என்று நம்புகிறேன்," என்னும் பொருள் அமைந்திருந்தது.

குமணப்பிரபு அந்தப் பாட்டினுடைய நேர்த்தியைக் கண்டு மிகவும் மகிழ்ந்தார். புலவர்க்குக் கொடுக்கக் கையில் பணம் இல்லையே என்று அவர் பட்ட வருத்தத்துக்குக் கணக்கேயில்லை. புலவரை வெறுங்கையோடு அனுப்ப அவர் மனம் சிறிதும் இணங்கவில்லை. அதனால் கும

ணப்பிரபு புலவரைப் பார்த்து, "புலவர் திலகமே! முன் நான் தானதருமங்கள் செய்து கொண்டிருந்த காலத்தில் நீர் வந்திருக்கக்




கூடாதா? கையில் ஒரு பணமும் இல்லாத வேளையிலா நீர் வரவேண்டும்! உம்மை வெறுங் கையோடு அனுப்ப என் மனம் கூசுகின்றதே!

என்னுடைய தம்பி இளங்குமணன் என் தலையைக் கொண்டு வருகிறவர்களுக்கு ஆயிரம் பொன் கொடுப்பதாகச் சொல்லியிருக்கிறான். இதோ! இந்த வாளை எடுத்துக் கொள்ளும். இதனால் என் தலையை வெட்டிக்கொண்டுபோய் என்னுடைய தம்பியிடத்தில் கொடும். அவன் உமக்கு ஆயிரம் பொன் தருவான். நீர் அப்பொருளைக் கொண்டு உம்முடைய வறுமையை நீக்கிக்கொள்ளும்,'' என்று சொல்லி, தம்முடைய வாளை எடுத்துக் கொடுத்தார்.

III

பெருந்தலைச் சாத்தனார் இதனைக் கேட்டு அளவிட்டுச் சொல்ல முடியாத வியப்பு அடைந்தார். இப்படித் தலையையும் கொடுக்கக்கூடிய தருமப்பிரபுக்கள் வேறே எங்கேயாகிலும் இருப்பார்களோ?'' என்று மூக்கின்மேல் விரலை வைத்து ஆலோசனை பண்ணினார்; ''இப்படிப் பட்ட மகாப் பிரபுவின் கூட உலோபியாகிய இளங்குமணன் எப்படிப் பிறந்தான்!'' என்று யோசித்தார். பின் குமணப் பிரபுவை எப்படியாவது அவருடைய வீட்டிற்குக் கொண்டு போய்ச் சேர்க்கவேண்டும் என்று அவர் தீர்மானித்தார். அதனால், அவர் குமணப் பிரபு கொடுத்த வாளை எடுத்துக்கொண்டு இளங்குமணன் இருக்கும் இடத்திற்கு வந்தார். அவனைப்

பார்த்து அவனுடைய உலோப குணம் விலகும் படி ஒரு பாட்டுப் பாடினர்.

அப்பாட்டு, "ஏ இளங் குமணா! நம்முடைய உடம்பு, நீரில் உண்டாகிய குமிழியைப்போல் சீக்கிரத்தில் அழியக்கூடியது. இவ்வுடல் அழிந்துபோன பிறகு, வீடு வாசல் சொத்து முதலியவைகளால், நமக்கு என்ன பயன் கிடைக்கப் போகிறது? நாம் இப்பொழுது தேடிக்கொள்ளும் நல்ல பெயரும் கெட்ட பெயருமே நமக்கு மிச்சம். நீ இதனைத் தெரிந்து கொள்ளாமல், உன்னுடைய அண்ணனைக் காட்டிற்கு விரட்டியது சரியன்று; இதனால் உனக்கு எவ்வளவு கெட்ட பெயர் உண்டாயிருக்கிறது என்பதைச் சிறிது நினைத்துப்பார்! இப்பொழுதும்கூட உன்னுடைய அண்ணன் குணம் எப்படி இருக்கிறது என்பதை எண்ணிப் பார்! மிடியினால் இடியுண்ட நான் அவனிடம் போய்ப் பாடினேன். அவன் தன்னுடைய தலையை வெட்டிக் கொண்டு போய் உன்னிடம் கொடுத்து ஆயிரம் பொன் வாங்கிக் கொள்ளும்படி தன் வாளைக் கொடுத்தான். இதோ பார்! அந்த வாள் என் கையில் இருக்கிறது. இதில் அவனுடைய பெயரும் எழுதப்பட்டிருக்கிறது. குடும்பக் கவலையினால், மகிழ்ச்சி என்பதையே பார்த்து அறியாத நான் உன் அண்ணனுடைய அறிவைப் பார்த்துப் பெருமகிழ்ச்சி

அடைந்துள்ளேன். என்னுடைய குடும்பக் கவலை உன்னுடைய அண்ணனைப் பார்த்ததி லிருந்து ஒழிந்துவிட்டது,'' என்ற பொருளைக் கொண்டிருந்தது.

மேற்படி பாட்டில் உள்ள பொருள்கள் இளங்குமணன் மனத்தில் சுறுக்கென்று பாய்ந் தன. தன் அண்ணனுடைய நல்ல குணங்கள் எல்லாம் இப்பொழுது இளங்குமணனுக்கு நன்றாய்த் தெரிந்தன. அப்பொழுதே, அவன் அந்தப் புலவருடன் அவ்விடத்தை விட்டு, தன்னுடைய அண்ணன் வசிக்கும் காட்டுக்குப் போனான். அவன் குமணப்பிரபுவின் கால்களில் விழுந்து மன்னிப்புக்கேட்டான். குமணப் பிரபு தம்பியைக் கட்டித் தழுவி மகிழ்ந்தார். இளங் குமணன் குமணப் பிரபுவை வீட்டிற்குத் திரும்பி வரும்படியாக வேண்டிக் கொண்டான். கூடப் போயிருந்த புலவரும் குமணப் பிரபுவை வீட்டிற்கு வரும்படி வற்புறுத்தினார். குமணப் பிரபு அவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கி முதியமலை என்ற ஊர் வந்துசேர்ந்தார். அதன்பின், குமணப் பிரபுவும் இளங்குமணனும் அன்பாய் இருந்தார்கள். அவர்களால், பின்னும் பலவகையான தான தருமங்கள் செய்யப்பட் டன. அந்தப் புலவருக்கும் நல்ல வெகுமானம் கிடைத்தது.

———

## 2. இரக்கமுள்ள புலவர்

I

கோவூரிலே ஒரு புலவர் இருந்தார். அவர் நன்றாய்ப் படித்த மேதாவி; நல்ல சமயங் களில், மந்திரிகளைப் போல அரசர்களுக்குப் புத்திமதி சொல்லக்கூடியவர். அவரிடத்தில் இரக்க குணம் அதிகம். எவரும் ஓர் எறும்புக்குக் கூடக் கெடுதி செய்ய, அவர் ஒப்பமாட்டார். அந்தக் காலத்தில் உள்ள அரசர்கள் எல்லாரும் அவரைக் கண்டால் மிகுந்த மரியாதை செய்வார் கள். அவரும் அவர்களுக்கு நல்ல சமயங்களில் தக்க புத்திமதிகளை எடுத்துச் சொல்லுவார்.

மேற்படி கோவூருக்குப் பக்கத்திலே ஆவூர் என்ற மற்றோர் ஊர் இருந்தது. அவ்வூரிலே ஓர் அரசன் இருந்தான். அவன் மீது அவ னுடைய தாயாதியாகிய இன்னோர் அரசன் படையெடுத்து வந்தான். ஆவூர் அரசனால் மற்ற அரசனோடு சண்டைசெய்ய முடியாது போயிற்று. அதனால், அவன் கோட்டைக் கதவுகளைச் சாத்திக்கொண்டு, ஆவூர் அரண் மனைக்குள் ஒளிந்துகொண்டான். எதிரியோ, கோட்டையின் நான்கு பக்கங்களையும் வளைத்துக் கொண்டான். உள்ளே இருந்து ஒருவரும் போக முடியாமல் போயிற்று. வெளியில் இருந் தும் எந்தவிதமான பொருள்களையும் கோட்டைக்

குள் கொண்டு போக முடியவில்லை. இப்படிப் பல நாள்கள் கழிந்தன. கோட்டைக்கு உள்ளே இருந்த மக்கள் உணவு கிடைக்காமல் மிகவும் துன்பப்பட்டார்கள். கோவூர்ப் புலவருக்கு இந்தச் செய்தி தெரிந்தது. அருளியல்பு வாய்ந்த புலவருக்கு அது மிகவும் கவலையை உண்டாக்கிற்று. அதனால் அவர் அந்த இரண்டு அரசர்களையும் ஒற்றுமைப்படுத்தப் புறப்பட்டார்.

புலவர் முதலில், ஆவூர் அரசனிடம் போய் "ஏ! அரசனே! நீ இப்படிக் கோட்டையை அடைத்துக்கொண்டு உள்ளே இருப்பது சரியன்று. உன்னிடத்தில் உள்ள யானைகள் எல்லாம் குளிக்காமலும், நல்ல உணவுகள் கிடைக்காமையால் மெலிந்தும் போய்க் கிடக்கின்றன. உன்னுடைய குடிகளாகிய ஆவூர் மக்கள் குடிக்கக்கூடத் தண்ணீர் கிடைக்காமையால் துன்பப்படுகிறார்கள். குழந்தைகள் எல்லாம் பால் கிடைக்காமையால் பசியால் துடிதுடித்துக் கதறுகின்றன. உன்னுடைய குதிரைகள் எல்லாம் தீனி கிடைக்காமையால் கால்கள் சோர்ந்து தள்ளாடுகின்றன: பசுக்கள் எல்லாம் மேய்ச்சலுக்குப் போகாமல் பரிதபிக்கின்றன. கன்றுகள் எல்லாம் வெறும் மடிகளைச் சுவைத்துப் பசி தீராமல் கண்ணீர் விடுகின்றன.

“ நீ இவைகளை எல்லாம் பார்த்தும், பார்க்காதது போல் இருப்பது கொஞ்சமும் சரியாகாது. குடிகளுக்குத் தகப்பனாகிய நீ இப்படி இருப்பது பெரும் பாவமாகும். இன்னும் உனக்கு இது பெரிய மானக் கேடான செயலாகும். நீ தருமசிந்தை உள்ளவன் ஆனால், உன்னுடைய குடிமக்களின் துன்பத்தைப் பார்த்து, உடனே கோட்டைக் கதவுகளைத் திறந்துவிடு; அல்லது வீரம் உள்ளவன் ஆனால், வெளியே போய் எதிரியோடு சண்டை செய்; வீணாகக் குடிமக்களைத் துயரப்பட விடாதே!” என்று சொன்னார். உடனே, அவ்வரசன் கோட்டைக் கதவுகளை எல்லாம் திறந்துவிட்டான்.

II

கோவூர் புலவர் கோட்டையை வளைத்துக் கொண்டு நிற்கும் எதிரியாகிய அரசனிடம், போனார். போய் அவனைப் பார்த்து, “ஏ வீர மிக்க மன்னனே! நீ இப்படிக் கோட்டையை வளைத்துக்கொண்டிருப்பது உன்னுடைய வீரத்திற்குச் சரியானது அன்று. பயந்து கோட்டைக்குள் பதுங்கியிருக்கும் அரசனை வெல்வதும் ஒரு வெற்றியாகுமா? அதுவும் தவிர, உன்னுடைய தாயாதியாகிய ஆவூர் அரசனை வெல்வதால் உனக்கு என்னபயன்? அவன் அடையும் தோல்வியில் அவன் மரபில உதித்த உனக்கும் பங்கு உண்டு அன்றோ? இன்னும்

ஆவூர் மக்கள் படும்பாடு சொல்லத் தரமில்லை. அவர்களும் நம்மைப்போல் கடவுளாற் படைக்கப்பட்ட மக்கள்; அன்ருே? அவர்கள் துயரம் நீங்கவேண்டியாவது நீ இந்தச் சண்டையை நிறுத்திவிடுவாயாக!'' என்று சமாதானங் கூறினுர். அன்று முதல், அவ்விரண்டு அரசர்களும் சண்டையில்லாமல் அரசாண்டுவந்தார்கள். ஆவூர்க் குடிகளின் துன்பங்களும் தீர்ந்தன. கோவூர்ப் புலவர்க்கும் கவலை நீங்கியது.

பிறகு, ஒருபொழுது ஆவூர் அரசன் மலையாள நாட்டில் உள்ள அரசனோடு சண்டை இட்டான். அச் சண்டையில் அவன் வெற்றி அடைந்தான்; மலையாள அரசனுடைய மக்களாகிய இரண்டு ஆண் குழந்தைகளைச் சண்டைக் கைதிகளாகக் கொண்டுவந்தான். அக் குழந்தைகளில் ஒன்றுக்கு மூன்று ஆண்டும், மற்றொன்றுக்கு நான்கு ஆண்டும் நிரம்பி இருந்தன. ஆவூர் அரசன் கொஞ்சங்கூட நெஞ்சிரக்கம் இல்லாமல், அந்தக் குழந்தைகளை, மதங் கொண்ட யானையை விட்டுக் கொல்லத் துணிந்தான். இந்தச் செய்தி கோவூர்ப் புலவருக்குத் தெரிந்தது. அவருடைய மனம் மிகவும் துடிதுடித்தது.

உடனே, அவர் அரசனுடைய அரண்மனைக்குப் போனுர். அங்கே அரண்மனை வாயிலில்

அச்சிறுவர்கள் நிறுத்தப்பட்டிருந்தார்கள். அப்பொழுதுதான் மதங்கொண்ட யானை ஒன்று அங்கே கொண்டுவரப்பட்டது. அரசன் ஒரு பக்கத்தில் அமர்ந்து இருந்தான். கோவூர்ப் புலவருக்கு இவைகளை எல்லாம் பார்த்தவுடனே, மனம் நெருப்பிற் பட்ட நெய்போல் உருகியது. அவர் அரசன் பக்கத்தில் போனார். அரசன் அவருக்கு இருக்கை தந்து உபசரித்தான்.

புலவர் அரசனைப் பார்த்து, "அரசனே! நீ அடைக்கலம் புகுந்த ஒரு புறுவுக்காகத் தன் உடம்பைக் கொடுத்த சிபிச் சக்கரவர்த்தியின் வழியிற் பிறந்தவன் அல்லனோ? இந்தச் சிறுவர் களோ தம்முடைய சொத்துக்களை ஏழைகளுக் குத் தானம் செய்யும் மலையமான் என்ற தருமப் பிரபுவின் பிள்ளைகள்; இவர்கள் இந்த யானை யைக் கண்டவுடனே, முன்னே அழுத அழு கையை விட்டு, யானையினுடைய அழகைப் பார்த்துச் சிரித்துக்கொண் டிருப்பதைப் பார்! அதோ பார்! அவர்கள் நம்மைப் பார்த்துத் திரும்பவும் அழ ஆரம்பிக்கின்றார்கள். இவ் வளவு விபரம் தெரியாத இந்தச் சிறுவர்களைக் கொல்வது மா பாவமாகும். இப்பிள்ளைகள் இருக்கும் நிலையில் உன் மக்கள் இருப்பதாகச் சிறிது நினைத்துப் பார். அப்பொழுது உன் மனம் என்ன பாடு படும்!" என்று புத்திமதிகள்

சொன்னார். ஆவூர் அரசனுக்கு உடனே, மனம் இரங்கியது. அவன் அப்பொழுதே அந்தச் சிறுவர்களை விடுவித்தான். அவர்கள் அரசனால் மலையாள தேசத்திற்கு அனுப்பப்பட்டார்கள்.

III

பின் ஒருநாள், இளந்தத்தன் என்ற புலவன் ஒருவன், ஆவூர் அரசனிடம் பரிசில் வாங்குவதற்காக வந்தான். அரசன் அவனை எதிரியிடத்தில் இருந்து வந்த வேவுகாரன் என்று ஐயுற்றான். அதனால், அவன் இளந்தத்தனைக் கொலை செய்ய உத்தரவு கொடுத்தான்.

கோவூர்ப் புலவர் இச்செய்தியைக் கேள்விப்பட்டார்; "ஐயோ! புலவனுக்கு இக்கதி வரலாமா?" என்று பரிதாபப்பட்டார். அவருக்கு எப்படியாவது இளந்தத்தனை விடுவிக்கவேண்டும் என்ற எண்ணம் உண்டாயிற்று. அதனால், அவர் குடல் குலுங்கும்படி அரசனிடம் ஓடினார். அரசன் வழக்கம்போல், அவருக்கு இருக்கை கொடுத்து உபசரித்தான். அவர் அரசனைப் பார்த்து, "அரசனே! நீ இந்தப் புலவனிடத்தில் கொண்ட ஐயப்பாடு சிறிதும் பொருத்தமானது அன்று. பழம் பழுத்த மரங்களைத் தேடிக்கொண்டு பறவைகள் எவ்வளவு தூரமானாலும் பறந்துபோகும். அதுபோல, புலவர்க

ளாகிய நாங்கள் தானம் செய்கிற இடங்களைத் தேடி எவ்வளவு தூரமானாலும் நடப்போம். ஆனால், வேவுபார்க்கும் வேலைக்கும் எங்களுக்கும் வெகுதூரம். நாங்கள் எங்களுக்குக் கிடைக்கும் பரிசுப்பொருள்களை நாளைக்கு வேண்டுமே என்று சேமித்து வைக்கவுங்கூட அறியோம். நாங்கள் கல்விச் சண்டையை மட்டும் விரும்புவோம். செல்வச் சண்டையை ஒருநாளும் விரும்பமாட்டோம். புலவனாகிய இளந்தத்தனை வீணை ஐயத்திற்காகக் கொல்லவேண்டாம். அவனைக் கொல்வதால், உனக்குப் பழியும் பாவமும் வந்து சேரும்,'' என்று சொன்னார். ஆவூர் அரசன் கோவூர்ப் புலவருடைய வார்த்தைகளைச் சரி என்று ஒப்புக்கொண்டான். இளந்தத்தன் கொலைத் தண்டனையினின்றும் தப்பிப் பிழைத்தான். அவனுக்குப் பல பரிசில்கள் ஆவூர் அரசனால் கொடுக்கப்பட்டன.

---

## 3. மயிலுக்குப் போர்வை யளித்த வள்ளல்

### I

மலையாள தேசத்திலே நல்லூர் என்ற ஓர் ஊர் இருந்தது. அவ்வூரில் பேகன் என்ற தருமப்பிரபு ஒருவர் இருந்தார். அவருடைய தேசத்திலே உள்ள மக்கள் மழை

வேண்டிய பொழுது, ‘மழையை அழைத்தல்’ என்ற ஒரு விழா நடத்துவார்கள். உடனே மழை நன்றாய்ப் பெய்யும். அவர்களுக்கு மழை வேண்டாத பொழுது, ‘மழையை அனுப்புதல்’ என்ற ஒரு விழாவை அவர்கள் செய்வார்கள். உடனே மழை நின்றுவிடும். மழை பெய்ய வேண்டிய பருவத்தில், மலையாள தேசத்தில் எல்லாப் பாகங்களிலும் தவறாமல் பெய்யும். அது போலவே, பேகன் என்ற தருமப்பிரபுவும் மனிதர்களில் ஏழை, பணக்காரன், பிறன், தன்னவன் என்று வேற்றுமை பாராட்டாமல், எல்லோருக்கும் தான தருமங்களைச் செய்வார். அவர் விலங்குகளிடத்திலும், பறவைகளிடத்திலும் மிகுந்த அருளுடையவர்.

மேலும், அவர் சண்டை செய்வதில் மிகவும் திறமைவாய்ந்தவர். அவர் சண்டை செய்வதானால் நல்ல வீரர்களோடுதான் சண்டை செய்வார். மெலியாரோடு ஒரு பொழுதும் சண்டை செய்ய மாட்டார். நல்ல வீரர்கள் ஆனாலும் அல்லது மிகுந்த துட்டர்கள் ஆனாலும் புறங்காட்டி ஓடுகிறவர்களை அப்பிரபு கொஞ்சங்கூட விரட்டமாட்டார். சண்டையில் காயம் பட்டவர்களைக் கண்டால், அவருக்கு மிகவும் இரக்கம் உண்டாய்விடும். காயம்பட்டவர்கள் எதிரிகளைச் சேர்ந்த



வர்களாய் இருந்தாலும், அவர் அவர்களுக்கு வேண்டிய இரணவைத்தியங்களைச் செய்வித்து நலப்படுத்துவார். சண்டை செய்யுங் காலத்தில், அவர் எதிரிகளுடைய நாட்டிலுள்ள கிழவர் கிழவிகளுக்கும், சிறுவர் சிறுமிகளுக்கும், பெண் களுக்கும் மிகுந்த காவல் அமைத்துவந்தார்!

புலவர்களைக் கண்டால், அவருக்கு மிகவும் கொண்டாட்டம். அக்காலத்தில் இருந்த புலவர்கள் பலர் அப்பிரபுவின்மீது பாட்டுக்கள் பாடிப் பலவகையான பரிசில்கள் பெற்றுள்ளார்கள்.

அப்பிரபுவுக்கு அருமையான மனைவி ஒருத்தி உண்டு. அவள் பெயர் கண்ணகி. அவளும் அவரைப் போலவே, தரும குணங்களும், அருளும் பொருந்தியவள். கண்ணகிக்குப் புலவர்களிடத்தில், மிகுந்த மதிப்புண்டு. ஏழைகளிடத்தில், அவளுக்கு மிகுந்த அன்பு உண்டு. அவள் புலவர்களையும் ஏழைகளையும் கண்டால் மிகுந்த மகிழ்ச்சியடைவாள். அவர்களுக்கு அவள் இனிய வார்த்தைகளாலும் மலர்ந்த முகத்தினாலும் செய்யும் உபசாரங்களுக்கு அளவில்லை.

மழை மிகுதியாகப் பெய்துகொண்டிருந்த ஒரு சமயத்தில், பேகப் பிரபு ஒரு மலைக்காட்டு வழியே போய்க்கொண்டிருந்தார். அங்கே சில மயில்கள், மழையால் நனைந்த தோகைகளோடு கூவிக்கொண்டிருந்தன. அருள் மிகுந்த பேகப் பிரபுவுக்கு அந்த மயில்கள் குளிரால் வருந்துவன போலத் தோன்றின. உடனே, அவர் தம்முடைய வீட்டுக்கு விரைவாய்ப் போனார்; சில போர்வைகளை எடுத்துவந்தார். அம்மயில்களின் மேல் அப்போர்வைகளைப் போட்டு மூடினார்.

II

பிறகு ஒரு சமயம் அவருடைய வாழ்க்கைத் துணைவியாகிய கண்ணகியின்மேல் அவருக்குக் கோபம் உண்டாயிற்று. அதனால், அவர் அவளை விட்டு விலகி வேறு ஓர் இடத்தில் போய்த் தங்கிக்கொண்டார். கண்ணகி அவரிடத்தில் எவ்வளவோ மன்னிப்புக் கேட்டுக் கொண்டும், அவருக்கு மனம் திரும்பவில்லை. சுற்றத்தார்களாலும் அவருடைய கோபத்தை மாற்ற முடியவில்லை. அப்பொழுது, கண்ணகியால் முன்பு உபசரித்து அனுப்பப்பட்ட புலவர்கள் வந்து பேகப் பிரபுவின்மேல் பல பாட்டுக்கள் பாடி, அவருடைய கோபத்தை மாற்றினார்கள்.

கபிலர் என்ற புலவர், "போர்த்திறன் வாய்ந்த பிரபுவே! நேற்று நான் உன்னுடைய வீட்டிற்குப் போய் இருந்தேன். நான் வழக்கம் போல் உன்னையும், உன்னுடைய மலையாள தேசத்தையும், உன்னுடைய மனைவியாகிய கண்ணகியையும் வாழ்த்திப் பாடினேன். அப்பொழுது, உன்னுடைய மனைவியின் கண்களிலிருந்து தண்ணீர் தாரை தாரையாக வழிந்தது. அதனால், உங்கள் இருவருக்குள் ஏதோ மனவேற்றுமை இருக்கிறதாக உணர்ந்தேன். உன்னுடைய அன்புக்கு உரியவளாகிய அவளை

அப்படி வருந்தும்படி விடுவது கூடாது'' என்ற பொருளமைந்த பாட்டு ஒன்று பாடினார்.

பரணர் என்ற புலவர், ''தான தருமங்களை நடத்துவதில் பேர் வாங்கிய பேகப் பிரபுவே! நான் நேற்று மாலைவேளையில் உன்னுடைய வீட்டிற்குப் போனேன். அங்கே உன்னுடைய காதலியாகிய கண்ணகி என்னைக் கண்டதும், கண்ணீர்த் துளிகளை முத்துக்களைப்போற் சிந்தினாள். ஏன் வருந்துகின்றாய்? பேகப் பிரபு எங்கே?'' என்று கேட்டேன். அதற்கு, அவள் 'அவர் என் மீது கோபம்கொண்டு போய் விட்டார்' என்று சொல்லி, ''ஐயோ!'' என அழுதாள். 'அதைப் பார்க்க என்னால் பொறுக்க முடியாது போயிற்று. அருட்குண மிகுந்த நீ எப்படி பொறுத்துக்கொண்டு இருக்கிறாய்? நீ இப்படி இருப்பது மிகவும் கொடுமையாகும்,' என்ற கருத்தைக்கொண்ட பாட்டைப் பாடினார்.

மேலும், அப்புலவர், ''குதிரைப் படைகளையும், யானைக் கூட்டங்களையும் உடைய பேகப் பிரபுவே! எளிய பறவையாகிய மயிலுக்கும் போர்வை கொடுத்தவன் ஆகிய நீ, உன்னிடத்தில் நெடுநாள் அன்பு காட்டி வந்த கண்ணகியைக் காப்பாற்றாமல் விட்டுவிடுதல் மிகவும் தப்பிதமாகும். நான் இன்று உன்னிடத்தில் இர

மாகக் கேட்பது பொன்னும் அன்று, பொருளும் அன்று. நீ இன்று உன்னுடைய பெரிய தேரில் ஏறி, உன்னை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் கண்ணகி இருப்பிடத்திற்குப் போகவேண்டும் என்பதே,'' என்ற கருத்தை உடைய மற்றொரு பாட்டையும் பாடினார். இம் மாதிரியே அரிசில் கிழார் என்ற புலவரும், பெருங்குன்றூர் கிழார் என்ற வித்துவானும் கண்ணகியின்மேல் உள்ள கோபத்தை மாற்றிக்கொள்ளும்படி பேகப் பிரபுவை வேண்டிக்கொண்டார்கள்.

---

## 4. ஓர் அதிருஷ்டமுள்ள பையன்

கருவூரிலே ஒரு பையன் இருந்தான். அவனுக்குச் சுமார் பதினான்கு வயது இருக்கும். அவன் குழந்தையாய் இருக்கும் பொழுதே, அவனுடைய தாயும், தந்தையும் இறந்து போனார்கள். அவனுக்குச் சிறு வயதில் ஓர் இடையூறு உண்டாயிற்று. அதில் அவனுடைய கால்கள் நெருப்பால் சுடப்பட்டன. அதனால் அவைகள் கருமை நிறம் கொண்டு இருந்தன. அதுமுதல், அவ்வூர் மக்கள் அவனைக் கரி காலன் என்று அழைக்கத் தொடங்கினார்கள். அவன் அச்சிறு பருவத்திலேயே மிகுந்த சுறு

சுறுப்பும், நல்ல அழகும் உடையவனுய் இருந்தான். ஆகையால், கருவூர் மக்கள் அவனிடத்தில் மிகுந்த விருப்பம் வைத்தார்கள். அவனுக்கு வேண்டிய உணவும் துணிமணிகளும் அவர்களால் கொடுக்கப்பட்டன.

சீகாழியிலே ஓர் அரசன் இருந்தான். அவன் திடீரென்று சந்ததி இல்லாமல் செத்தான். உடனே, ஊரின் எல்லாப் பக்கங்களிலும் பலவிதமான ரச்சரவுகள் உண்டாயின. கொடியர்கள் இதுதான் சமயம் என்று எண்ணிக் கொள்ளையடிக்கத் தொடங்கிஞர்கள். கொலைகளும், கொள்ளைகளும், களவுகளும், கலகங்களும் மிகுந்தன. இவைகளால் வேளாளர்களின் உழவுத் தொழில்கள் நின்றுவிட்டன; வியாபாரம் நடக்கவில்லை; வேலைக்காரர்களுக்கு வேலையும் இல்லை; கூலியும் இல்லை; விலைவாசிகள் மிகுந்துவிட்டன. எல்லாப் பக்கங்களிலும் பஞ்சம் உண்டாய்விட்டது.

அவ்வூரில் உள்ள பல மக்களுக்கு இது மிகுந்த துன்பமாய் இருந்தது. அவர்கள் எல்லோரும் ஒன்ருய்க் கூடிஞர்கள்; இதற்கு என்ன செய்வது என்று எண்ணிப் பார்த்தார்கள். அவர்கள் நல்ல ஓர் அரசன் இல்லாதபடியினுலேதான் இத்துன்பங்கள் உண்டாயின என்று கண்டுபிடித்தார்கள். பட்டத்து யானையைக் கொண்டு ஒரு

நல்ல அரசனைத் தெரிந்து எடுக்க முடிவுசெய்தார்கள். அப்படியே பட்டத்து யானை கொண்டு வரப்பட்டது. அவர்கள் அதை நன்றாய் அலங்கரித்தார்கள். அதன்மேல் ஓர் அம்பாரி வைத்துக் கட்டப்பட்டது. காலை வேளையில், அந்த யானை கட்டு அவிழ்த்து விடப்பட்டது.

உடனே, அந்த யானை சீகாழியை விட்டுப் புறப்பட்டது. அதன் பின்னாலே, அவ்வூர் மக்கள் தொடர்ந்து போனார்கள். அஃது, ஒரே நடையாய்ப் பகல் முழுவதும் நடந்து போயிற்று. அதற்கு எதிரில் அநேக மக்கள் வந்து நின்று பார்த்தார்கள். அது தங்களில் யாரையாவது அரசனாகத் தெரிந்து எடுக்கக்கூடும் என்பது அவர்களுடைய கருத்து. அதுவோ, எவரையும் கண் எடுத்துப் பார்க்காமல் நடந்தது. இப்படியாக அது நெடுந்தூரம் போய்விட்டது. ஞாயிறு மேற்கே மறையுஞ் சமயமும் வந்தது. அப்பொழுது, அது பக்கத்திலே தெரிந்த கருவூருக்குள் புகுந்தது. நம் கரிகாலன் தெருவில் விளையாடிக்கொண்டு இருந்தான்.

பட்டத்து யானை தன் துதிக்கையால், அவனைத் தூக்கி, அம்பாரிமீது வைத்தது. துணிவு மிக்க அப்பையனுக்கு அது ஒரு விளையாட்டாகக் காணப்பட்டது. அவன் அம்பாரியில் கம்பீரமாக உட்கார்ந்துகொண்டான். யானையைத்

தொடர்ந்து வந்திருந்த சீகாழி மக்கள் தங்களுக்கு அரசன் கிடைத்துவிட்டதாகக் கண்டு மகிழ்ந்து கைகொட்டிக் குதித்தார்கள். யானை பழையபடி வந்த வழியே திரும்பியது. அஃது அந்த இரவு எல்லாம் நடந்தது! மறு நாள் காலை வேளையிற் சீகாழிக்கு வந்து சேர்ந்தது. சீகாழி மக்கள் மகிழ்ச்சியோடு கரிகாலனை யானையை விட்டுக் கீழே இறக்கினார்கள். கரிகாலன் அரசனுடைய அரண்மனைக்குக் கொண்டு போகப்பட்டான். பலவிதமான மேளவாத்தியங்கள் முழங்கின. சீகாழி மக்களால் கரிகாலன் முடிசூட்டப்பட்டான்.

---

## 5. கரிகாலனுடைய புத்திசாலித்தனம்

கரிகாலன் அரசன் ஆகி ஆறுமாத காலங்கள் ஆயின. இச்சிறிது காலத்திற்குள் ஊரில் நடந்த கலகங்கள் எல்லாம் அடங்கின; கொடியர்கள் எல்லோரும் பிடிபட்டுத் தண்டிக்கப் பட்டார்கள்; உழவுத் தொழில்கள் நன்றாய் நடந்தன; வியாபாரமும் ஒழுங்காய் நடைபெற்றது; சீகாழி மக்கள் மகிழ்ச்சியும், மனவமைதியும் அடைந்தார்கள். ஒருநாள் காலைப்பொழுதில், கரிகாலனுடைய சபைக்கு ஒரு வழக்கு வந்தது. உள் நாட்டுப் பஞ்சாயத்துச் சபையிலுங்கூட அதை முடிவுசெய்ய முடியாதுபோயிற்று.

அஃது, அவ்வளவு பெரும் சிக்கலான வழக்காய் இருந்தது. பையனாகிய கரிகாலன் அதற்குச் சிறிதும் அஞ்சாமல், அந்த வழக்கை விசாரிக்கத் தொடங்கினான்.

அப்பொழுது, கிழவர்களாகிய வழக்காளிகள், சிறுவனாகிய கரிகாலன் தீர்ப்பில் தங்களுக்கு நீதி கிடைக்குமோ? கிடைக்காதோ? என்று ஐயுற்றார்கள். கரிகாலன் அவர்களுடைய ஐயத்தை நீக்கவேண்டியது இன்றியமையாதது என்று எண்ணினான். அதனால், அவன் அவர்களைப் பார்த்து, "அறிவாளிகளே! நீங்கள் கொண்ட ஐயம் ஒழுங்கானதே. மிகுந்த வயதும், கூர்ந்த அறிவும் கொண்ட ஓர் அரசப் பிரதிநிதியை நான் இங்கே அனுப்பிவைக்கிறேன். உங்கள் வழக்கை நன்றாய் விசாரித்து முடிவு கொடுப்பார். நீங்கள் இதற்காகக் கவலைப்பட வேண்டாம்," என்று சொல்லிவிட்டு, அரண்மனைக்குப் போனான்.

அங்கே, அவன் நரைத்த தாடி மீசைகளையும் தலை முடியையும் கொண்டுவரும்படி தன் வேலைக்காரர்களுக்குக் கட்டளையிட்டான். அப்படியே அவைகள் வேலைக்காரர்களால் கொண்டு வரப்பட்டன. அவன் அவைகளை நன்றாகத் தன் முகத்திலும் தலையிலும் ஒட்டவைத்துக்கொண்

டான் ; பெரிய உடுப்புக்களை எடுத்துப் போட்டுக் கொண்டான். அவன் பதினன்கு வயதுடைய சிறுவனுயினும், நன்ருய் வளர்ந்து, பருத்து இருந்தான். அதனுல் அவன் நரைத்த தாடி மீசை முதலியவைகளால் உருவத்தை மாற்றிய உடனே, மிகவும் அறிவும் ஆற்றலு முள்ள நீதி மான் போலக் காணப்பட்டான்.

கரிகாலன் அவ்விதம் உருமாற்றத்துடன் அரச சபைக்குப் போனுன். அங்கே உள்ள வழக்காளிகளும், வழக்கறிஞர்களும் எழுந்து நின்று அவனை வரவேற்ருர்கள். அவனுக்கு அவர்களால் பலவிதமான மரியாதைகள் காண் பிக்கப்பட்டன. அவன் அங்கே இருந்த உயர்ந்த இருக்கையில் உட்கார்ந்தான். வழக்காளிகள் தங்கள் வழக்கை எடுத்துச் சொன்னுர்கள். கரி காலன் அந்த வழக்கின் போக்குகளை நன்ருய்க் கூர்ந்து கேட்டான். வழக்கறிஞர்கள் தங்க ளுடைய கட்சிகளைத் திறமையாக எடுத்துச் சொன்னுர்கள். கடைசியில், வழக்காளிகள் இரு வரும் மனமொப்பும்படி கரிகாலனுல் முடிவு சொல்லப்பட்டது. வழக்காளிகளும், வழக்கறி ஞர்களும் அவனைப் பலவகையாகப் புகழ்ந்து பேசினுர்கள். பிறகு அவர்கள் உருமாறியிருக் கும் கரிகாலனுக்கு வணக்கம் செய்து, வீட்டுக்குப் புறப்படத் தொடங்கினுர்கள். அவ்வேளை, கரி

காலன் தன் முகத்திலும், தலையிலும் ஒட்டவைக்கப்பட்டு இருந்த நரைத்த தாடி மீசைகளையும், முடியையும் தன் கைகளால் எடுத்து எறிந்தான். வழக்காளிகளும், வழக்கறிஞர்களும் அவனைக் கண்டு, மிகுந்த வியப்புடன் மகிழ்ந்து போற்றினார்கள்.

---

## 6. முல்லைக்குத் தேர் கொடுத்த மன்னன்

பறம்பு என்று ஒரு சிறிய மலைநாடு இருந்தது. அதில் முந்நூறு ஊர்கள் உண்டு. அவைகள் ஒவ்வொன்றும் மலைவளம் மிகுதியும் கொண்டதாகும். அவைகளிடத்தே பல அருவிகள் அழகாகக் காணப்படும்; வானத்தில் உள்ள விண்மீன்களைப்போல் பல சிறிய சுனைகளும் காணப்பட்டன. அங்கே உழவர்களால் விளைவிக்கப்படாமலே விளையும் நான்கு விதமான பொருள்கள் கிடைக்கும். அவை மூங்கில் நெல், பலாப்பழம், வள்ளிக்கிழங்கு, தேன் என்பவைகளாம். அங்கே பல சந்தனக் காடுகள் இருந்தன. அங்கேயுள்ள பெண்கள் சந்தனக் கட்டைகளையே விறகாக அடுப்பு எரிப்பார்கள். அதனால், எல்லா ஊர்களிலும் நல்ல வாசனைப் புகைகள் நிறைந்திருக்கும்.

ஒன்பது கோள்களும் நிலைமாறி, மற்ற நாடுகளில் மழை பெய்யாத பஞ்சகாலத்திலுங்கூட

அங்கே நல்ல மழை பெய்யும். மேட்டு நிலங்களில் வரகும் தினையும் அடிக்கும் தலைக்கும் ஒன்றாகக் காய்த்த கதிர்களோடு கூடி விளைந்து கிடக்கும். மலைச் சாரல்களில் எள் செடிகள் சடைசடையாய்க் காய்த்துச் சாய்ந்து கிடக்கும். தோட்டங்களில், அவரைக் கொடிகள் புதர்போலப் படர்ந்து, வெள்ளைக்காய்களோடு காணப்படும். காட்டுப் பாங்கான இடங்களில் முல்லைக் கொடிகள் அழகாகப் படர்ந்து அரும்புகளோடு காணப்படும். மரங்களில் தேன் கூடுகள் மிகுந்து தேனைச்சொரியும். அந்தநாட்டு மக்கள் அங்கே கிடைக்கும் தேனை மூங்கிற் குழாய்களில் அடைத்து, பூமியில் புதைத்து வைப்பார்கள். சில மாதங்கள் சென்றதும், அக்குழாய்கள் அவர்களால் வெளியே எடுக்கப்படும். அவைகளிலுள்ள தேனை அவர்கள் நலல பானமாகக் கருதிக் குடித்து மகிழ்வார்கள்.

பறம்பு என்ற ஊர் முன்சொன்ன முந்நூறு ஊர்களில் மிகவும் முக்கியமானது. அது அந்த நாட்டிற்கு உரிய அரசன் வசிக்கும் ஊராகும். அவ்வூரின் அரசன் பெயர் பாரி. அவன் போர் செய்தலில் மிகவும் வல்லவன். அவன் ஏழைகளுக்கு மழையைப்போலப் பொருள்களை வாரிக் கொடுப்பான். அவனுக்கு இரண்டு பெண்குழந்

தைகள் உண்டு. கபிலர் என்ற பெரிய புலவர் அவனுடைய நண்பராய் இருந்தார்.

அவன் ஒருநாள் வேட்டையாடுவதற்காகத் தேர்மேல் ஏறிக் காட்டு வழியே போனான். வழி



யில், அவனுக்குத் தண்ணீர் வேட்கை உண்டா

பிற்று! ஆகவே, அவன் தேரை ஒரு குளக்கரையில் நிறுத்தினான். குளத்தில் இறங்கித் தண்ணீர் குடித்து வேட்கை தணித்துக்கொண்டான். குளக்கரையில், குளிர்ந்த நிழலையுடைய மாமரம் ஒன்று நின்றுகொண்டு இருந்தது. அவன் அதன் அடியில் போய் உட்கார்ந்து, சிறிது நேரம் களைப்பாறினான்.

இதற்குள், குளக்கரையில் நிறுத்தப்பட்டிருந்த தேரினைப் பக்கத்தில் முளைத்திருந்த முல்லைக்கொடி ஒன்று பற்றிப் படர்ந்து, சுற்றியது. பாரி களைப்பாறிவிட்டுத் தேரின் பக்கத்தில் வந்தான்: முல்லைக்கொடி ஒன்று தேரை வளைத்துச் சுற்றிக்கொண்டு இருப்பதைக் கண்டான். அதில் பல முல்லையரும்புகள் வரிசையாக இருந்தன. முல்லைக்கொடிகள் அரும்புகளாகிய பல்லைக் காட்டித் தேரைக் கொடுக்கும்படி கேட்பதுபோல் பாரிக்குக் காணப்பட்டது. அதனால், அவன் அந்தத் தேரை முல்லைக்கொடிக்குத் தானமாகக் கொடுத்துவிட்டான். முல்லையும் அத்தேர் முழுவதும் படர்ந்து பூத்து நின்றது.

பல பெரிய அரசர்கள் அவனை வெல்வதற்காகப் படை எடுத்து வந்தார்கள். அவனுடைய பறம்புநாடு நான்கு பக்கங்களிலும் மலைகளால்

சூழப்பட்டு இருந்தது. அந்த நாட்டு மக்கள் போர்செய்வதில் மிகவும் வல்லவர்கள். பாரியும் போர் செய்வதில் மிகவும் தேர்ச்சியுள்ளவன். ஆதலால், அந்தப் பெரிய அரசர்களால் அவனை வெல்ல முடியவில்லை. பாரி புலவர்களிடத்திலும், ஏழைகளிடத்திலும் மிக விருப்பமுடையவன். இதை எப்படியோ அவனுடைய எதிரிகளாகிய அரசர்கள் தெரிந்துகொண்டார்கள். அதனால், அவர்கள் தங்கள் உருவங்களைப், படித்த புலவர் களைப் போலவும், ஏழை மக்களைப் போலவும் மாற்றிக்கொண்டார்கள்; உடைகளில் போர்க் கருவிகளை மறைத்து வைத்துக்கொண்டு பறம்பு நாட்டுக்குள் நுழைந்தார்கள்; பாரியை ஏமாற் றிக் கொன்றார்கள்.

கபிலர் என்ற, பாரியினுடைய நண்பரும் அவனுடைய பெண்மக்களும் பாரி இறந்தது கேட்டு, மிகவும் வருத்தப்பட்டார்கள். அப் பொழுது பாரியினுடைய பெண்மக்களுக்கு மணவினை கூட ஆகாமல் இருந்தது. கபிலர் அப் பெண்களைப் பெரிய அரசர்களுக்குக் கலி யாணம் செய்து கொடுக்கவேண்டிப் பலவிதமாக முயன்றார். அம்முயற்சி கைகூடவில்லை. அத னால், அவர் அந்தப் பெண்களை இரண்டு பார்ப் பனச் சிறுவர்களுக்கு மணஞ்செய்து கொடுத்து விட்டுக் காட்டுக்குத் தவம் செய்யப் போனார்.

## 7. வறுமையால் வாடிய புலவர்

ஓர் ஊரிலே ஒரு தமிழ்ப் புலவர் இருந்தார். அவர் படிப்பில் மிகவும் வல்லவர்; எப்பொழுதும் உண்மையே பேசுவார். அவருக்கு மனதில் ஒன்றும் வாக்கில் ஒன்றுமாகப் பேசத் தெரியாது. அவர், சில புலவர்களைப் போல, கண்டவர்களை எல்லாம் வீணுகப் புகழ்ந்து திரியமாட்டார். அவர் பாடும் பாட்டுக்கள் சுவரில் எழுதிய பெரிய சித்திரங்களைப்போல், கேட்போருக்கு மிகவும் அழகாக இருக்கும். அதனுல், அவரை எல்லோரும் பெருஞ்சித்திரனுர் என்று பெயர் சொல்லி அழைப்பார்கள்.

ஆனுல், அவருக்கு வறுமை (தரித்திரம்) என்ற ஒரு குறைமட்டும் இருந்தது. அவர் வயதாகிய ஒரு தாயையும் மெலிந்து வாடிய மனைவியையும், பல குழந்தைகளையும் பெற்றிருந்தார். வீட்டில் சாப்பாட்டுச் செலவு அதிகம். அவர் படிப்பினுடைய தன்மையை அறிந்து, அவருக்கு வெகுமதிகள் கொடுக்கக்கூடிய பணக்காரர்கள் அவ்வூரில் யாரும் இல்லை. அவருக்கு அவருடைய படிப்பிற்குத் தகுதியான உத்தியோகமும் கிடைக்கவில்லை. பாவம்! அவர் என்ன செய்வார்? வறுமையினுலே மிகவும் துன்பப்பட்டார்.

புலவருடைய தாயாருக்கு வேளா வேளைக்குச் சரியான சாப்பாடு கிடைக்கவில்லை. அதனால், அவள் மிகவும் மெலிந்து தளர்ந்துபோய் இருந்தாள். அவளால் ஊன்றுகோல் இல்லாமல் நடக்க முடியவில்லை. அவளுக்குத் தலைமயிர் பஞ்சுப் பொதி போல நரைத்துப்போய் இருந்தது; கண்கள் பஞ்சடைந்துபோய் இருந்தன. அவருடைய மனைவியோ குடும்பக் கவலைகளாலும், பட்டினியாலும் மெலிந்து துரும்புபோல் இருந்தாள். அவளுடைய கண்கள் குழி விழுந்து இருந்தன. பல பிள்ளைகளும் அடிக்கடி சுவைத்துப் பால் சாப்பிட்டபடியால், அவளுடைய மார்புகள் வற்றி உலர்ந்து போய் இருந்தன. பிள்ளைகள் கோலும் குரங்கும் போலத் திரிந்தன. புலவரோ, எலும்புகள் வெளிப்பட்ட உடம்போடு பார்ப்பதற்கு மிகவும் விகாரமாய்க் காணப்பட்டார்.

புலவருடைய வீட்டில் ஊர்ந்து திரியும் எறும்புகளுக்குக்கூட உணவு கிடைப்பது அருமையாக இருந்தது. அவருடைய மனைவி நாடோறும் குப்பையிலே முளைத்திருக்கும் கீரைகளைப் பறித்து வருவாள். அக்கீரைகள் உப்புக்கூடப் போடப்படாமல், தண்ணீர் விட்டு அவித்துவைக்கப்படும். அக்கீரைச் சாப்பாட்

டையே அப்புலவரும், அவருடைய தாயும், மனைவியும், பெரிய பிள்ளைகளும் சாப்பிடுவார்கள். அக்கீரை உணவில் எவ்விதமான உருசியும் இல்லாதபடியால், அவர்கள் அதை அரை வயிற்றுக்கு மேல் சாப்பிடமாட்டார்கள். அவர்களுடைய உடைகள் பல துண்டுகளாகவும், கிழிசல்களாகவும் உள்ள கந்தைகளே யாகும்.

புலவருடைய கடைசிக் குழந்தைக்கு மூன்று வயதாகி இருந்தது. அது பிறந்ததிலிருந்து ஒரு நாளாவது தாய்ப்பாலை வயிறுரக் குடித்தது கிடையாது. தாய்க்குச் சரியான உணவு கிடைத்தால் அல்லவோ பிள்ளைக்கு வயிறு நிறையப் பால் கிடைக்கும்? ஒருநாள், அக்குழந்தை தாயினுடைய உலர்ந்த மார்பைச் சுவைத்துப் பார்த்தது. பால் சிறிதுகூட அதற்குக் கிடைக்கவில்லை; அது தன்னுடைய தாய் சாப்பிடும் கீரை உணவையாவது சாப்பிடலாம் என்று நினைத்தது. உடனே, அஃது அடுக்களைக்குப் போயிற்று. அங்கே கீரை உணவு சமைக்கும்படியான பானை உலைமூடி ஒன்றினாலே மூடப்பட்டு இருந்தது. குழந்தை அதை மிகுந்த ஆசையோடு திறந்து பார்த்தது. ஐயோ! பரிதாபம்! அதில் ஒன்றும் இல்லை. குழந்தை ஏமாறிய முகத்துடன் அழ ஆரம்பித்தது.

நண்பகலில் அழத் தொடங்கிய அந்தக் குழந்தை அன்றிரவுவரை விடாமல் பிடிவாதமாக அழுதுகொண்டு இருந்தது. அதற்குத் தொண்டை கட்டிப்போய்விட்டது; கண்கள் சிவந்துபோய்விட்டன. தாயாருக்கோ அதைப் பார்க்கச் சகிக்கவில்லை. அவள் எவ்வளவோ சமாதானம் சொல்லிப்பார்த்தாள்; முடியவில்லை. அவள், "புலி வருகிறது புலி!" என்று சொல்லி அச்சுறுத்தினாள். குழந்தை அதற்கும் தன் அழுகையை நிறுத்தவில்லை. பின் அவள், அக் குழந்தைக்கு அம்புலியை (சந்திரனை)க் காட்டிப் பார்த்தாள். அதனாலும், அக்குழந்தையின் பிடிவாதம் நீங்கவில்லை. முடிவில், அவள், "குழந்தாய்! உன் அப்பா மிகவும் கெட்டவர். நீ அன்று அவரை எப்படிக் கோபித்துப் பார்த்தாய்? அதைச் சிறிது காட்டு, பார்க்கலாம்?" என்று குழந்தையினிடம் சொன்னாள். உடனே, அது தன் அழுகையை நிறுத்தி முறைத்துப் பார்த்துச் சிரித்தது.

பெருஞ்சித்திரனார்க்குத் தன் குடும்பத் துன்பத்தைப் பார்த்துக்கொண்டு வாளா இருக்க முடியவில்லை. எப்படியாவது பணத்தைச் சம்பாதிக்கவேண்டும் என்று அவர் முடிவு செய்தார். அப்படியே அவர் நெடுநாள் வீட்டைவிட்டு

வெளி ஊர்களுக்குப் புறப்பட்டார். அவர் வண்டி முதலிய வாகனங்களுக்கு எங்கே போவார்? பாவம்! கால் நடையாகவே நடக்க ஆரம்பித்தார். இடுப்பில் கட்டிக்கொள்ள நல்ல ஆடையும் கூட அவருக்குக் கிடைக்கவில்லை. ஒரு கிழிசல் நிறைந்த கந்தைதான் அவர் இடுப்பை மறைத்துக் கொண்டு இருந்தது. அவரிடத்தில் வெயிலுக்குத் தலைமேல் போட்டுக் கொள்ள ஒரு சிறிய துணிகூட இல்லை.

புலவர் பகற்பொழுது எல்லாம் நடந்தார். அவர் பல குன்றுகளையும், மலைகளையும், காடுகளையும் கடந்தார். அவர் அன்று மாலை வேளையில் **தகடூர்** என்ற ஓர் ஊருக்குப் போய்ச் சேர்ந்தார். அவ்வூரில் அதியமான் என்ற பெயரையுடைய ஓர் அரசர் இருந்தார். அவர் ஆடம்பரத்தில் மிகவும் விருப்பம் உடையவர். அவருக்குப் புலவருடைய பஞ்சைக்கோலத்தைக் காணப் பிடிக்கவில்லை. ஆதலால், அவ்வரசர் புலவரைக் கண்டு பேச மறுத்துவிட்டார். அவர் தன்னைக் காண வரும் பல ஏழைகளைப் போலவே புலவரையும் அலட்சியமாக நினைத்தார். அதனால், அவர் புலவருக்கு இரண்டொரு செப்புக்காசுகளை வேலைக்காரர்கள் மூலமாகக் கொடுத்து அனுப்பினார். அது பெருஞ்சித்திரனாருக்கு மிக

வும் மானக்கேடாக இருந்தது. ஆகையால், அவர் அந்த வெகுமதியை வேண்டாம் என்று சொல்லித் திருப்பி அனுப்பிவிட்டார்.

புலவர் அன்று இரவு அவ்வூரிலேயே தங்கி இருந்தார். மறுநாள் காலை, அவர் அவ்விடத்தை விட்டு வெளிப்பட்டார் ; அன்று பகல் எல்லாம் நடந்தார். மாலைப்பொழுதில் மானூர் என்ற ஓர் ஊர் அவருக்கு எதிர்ப்பட்டது. அந்த ஊரை வெளிமான் என்னும் பெயரையுடைய ஒரு சிற்றரசன் ஆண்டு கொண்டு இருந்தான். அவனுக்கு இளவெளிமான் என்று ஒரு தம்பியும் உண்டு. வெளிமான் புலவர்களிடத்தில் மிகுந்த அன்பு உடையவன். ஆதலால், அவன் பெருஞ்சித்திரனாரை விருப்பத்துடனே எதிர்கொண்டு அழைத்தான். அவருக்கு அவனால் பலவகையான உபசாரங்கள் செய்யப்பட்டன. புலவரும் மிகுந்த மகிழ்ச்சியோடு அங்கே சில நாட்கள் தங்கி இருந்தார் ; அவனிடத்தில் தன்னுடைய படிப்பின் திறமைகளை எல்லாம் காண்பித்தார். வெளிமானும் புலவருடைய கல்வித் திறமைகளைக் கண்டு மிகவும் மகிழ்ச்சி அடைந்தான்.

இப்படி இருக்கும் பொழுது, ஒருநாள் வெளிமானுக்கு நோய் கண்டது. அந்நோய் இரண்டு நாட்களில் மிகுதிப்பட்டு, அவனைக்

கொல்லத் தொடங்கியது. வெளிமான் இறக்குந் தருவாயில், தன்னுடைய தம்பி இளவெளிமானைக் கூப்பிட்டான்; புலவர்க்குப் பரிசில்கள் பல கொடுத்து அனுப்பும்படி சொன்னான்; உடனே இறந்தான்.

ஐயோ! பாவம்! புலவர் என் செய்வார்? அங்கேயும் அவருடைய கெட்ட காலம் நுழைந்து விட்டது. இளவெளிமான் தன்னுடைய அண்ணன் சாவுக்குப் புலவர் வந்ததே காரணம் என்று நினைத்தான்; புலவரை மிகவும் வெறுக்கலானான். அவன் அவரைக் கண்ணால் காணவும் விரும்பவில்லை; தன்னுடைய வேலைக்காரர்களிடத்தில் இரண்டொரு வெள்ளிக் காசுகளைக் கொடுத்துப் புலவரிடம் கொடுக்கும்படி சொன்னான். புலவர்க்கு அது மிகவும் மானக் குறைவாகக் காணப்பட்டது. ஆகையால் அவர் அக்காசுகளைக் கண்ணாலும் பார்க்காமல் அப்பால் நடந்தார்.

புலவர்க்கோ எங்கே போவது என்று தெரியவில்லை. அவர் போகும் இடங்களில் எல்லாம் அவருடைய கெட்டகாலமும் போய்க் கொண்டு இருந்தது. அதனால் அவர் கவலையோடு நாலு பக்கங்களிலும் பார்த்துக்கொண்டே நடந்தார். சிறிது தூரத்தில், சில களைக்கூத்

தாடிகள் மகிழ்ச்சியோடு ஆடிப்பாடிக்கொண்டு வந்தார்கள். அவர்கள் விலை உயர்ந்த பல நகைகளை அணிந்துகொண்டும் இருந்தார்கள். புலவருக்கு அவர்களுடைய வாழ்க்கையைக் கண்டு பொறாமை உண்டாகியது. கழைக்கூத்தாடிகள் புலவருடைய நிலையைப் பார்த்து மிகவும் இரக்கம் கொண்டார்கள்.

அவர்கள் புலவருக்கு, தாங்கள் பரிசில் பெற்ற இடமாகிய முதிரமலை என்ற ஊருக்குப் போக வேண்டியவழி விவரங்களை முதலில் சொன்னார்கள். பின்பு, அவர்கள் அங்குள்ள குமணப் பிரபுவைப் பற்றியும், அவர் செய்யும் தான தருமங்களைப் பற்றியும் விரிவாக எடுத்துப் பேசினார்கள். பெருஞ்சித்திரனாரும் நல்லது என்று முதிரமலை என்ற ஊரை நோக்கி நடந்தார். அவருடைய கவலையும் அவரை விட்டு அப்பால் நடந்தது. அவருடைய கெட்ட காலமும், 'கெட்டேன்' என்று அவரை விட்டு ஓடியது. புலவரும் முதிரமலை என்ற ஊர்க்குள் நுழைந்தார்; குமணப்பிரபுவைக் கண்டார். குமணப் பிரபு பெருஞ்சித்திரனாரை அன்புடன் எதிர்கொண்டு அழைத்தார்; அருமையான பல உபசாரங்களைச் செய்தார். புலவர் குமணப் பிரபுவின் குணங்களையும் புகழையும் பல பாட்டுக்களால் பாடிக் கொண்டாடினார்.

குமணப் பிரபு பெருஞ்சித்திரனார் பாட்டுக்களைக் கேட்டு, அடைந்த மகிழ்விற்கு அளவே இல்லை. அவர், புலவருக்குப் பலவகையான பொன் நகைகளையும், பொன் நாணயங்களையும் பரிசிலாகக் கொடுத்தார். பிரபு புலவரைத் தம்மோடு இருத்திப் பொற்கலங்களில் நல்ல உணவைச் சாப்பிடச் செய்தார். புலவர் வீட்டுக்குத் திரும்பும்பொழுது, காடுகளையும், மலைகளையும் கடக்க வேண்டியதை நினைத்து மலைவு கொண்டார். உடனே, பிரபு அவர் சங்கடத்தை அறிந்துகொண்டார்; ஒரு பெரிய யானையைப் பாகனோடு புலவருக்கு வெகுமதியாகக் கொடுத்தார்.

பிள்ளைகளே! பார்த்தீர்களா! புலவருக்கு வந்த நல்லகாலத்தை! பெருஞ்சித்திரனார் பட்டு, பீதாம்பரம் முதலிய உடைகளோடும் விலை உயர்ந்த வெகுமதிகளோடும் யானை மீது ஏறினார். யானை இவருடைய ஊரை நோக்கி நடந்தது, இடைவழியில் மாறனார் எதிர்ப்பட்டது. புலவர் உடனே, யானையை விட்டுக் கீழே இறங்கினார். யானை அவ்வூர்க்கு வெளியே உள்ள ஒரு பெரிய மரத்தில் கட்டப்பட்டது. புலவர் ஊருக்குள் போனார். அவ்வூர் அரசனாகிய இளவெளிமானை அவர் கண்டார். "ஏ! அரசனே! புலவர்க்குப் பரிசில்கள் கொடுக்கும் பிரபுவாக,

நீ மட்டும்தான் இந்த உலகத்தில் இருக்கிறதாய் நினைத்துக் கொள்ளாதே! எவ்வளவோ பிரபுக்கள் இருக்கிறார்கள். நீ அதைக் காண வேண்டுமானால், என்னோடு வந்து காண்பாயாக. நான் பெற்ற பரிசிலாகிய பெரிய யானை உன்னுடைய ஊருக்கு வெளியே உள்ள அந்தப் பெரிய மரத்தில் கட்டப்பட்டிருக்கிறது. பார்!'' என்று அவர் இள வெளிமானிடத்தில் சொன்னார். இள வெளிமான் அப்படியே போய் யானையைப் பார்த்து வெட்கிப் போனான். புலவரும் பழைய படி யானைமீது ஏறித் தம்மூர் போய்ச் சேர்ந்தார்.

பெருஞ்சித்திரனார் யானைமேல் வருவதைக் கேள்விப்பட்ட அவ்வூர் மக்களும், அவர் மனைவியும் பெருவியப்போடு அவரை எதிர்கொண்டார்கள். குமணப்பிரபு கொடுத்த பொருள்களை வைத்துக் கொண்டு புலவர் தம் குடும்பத்தைச் சீராய் நடத்தினார். அவராலும், அவருடைய மனைவியாலும் பல ஏழைகள் காப்பாற்றப் பட்டார்கள்.



## 8. கருநெல்லிக்கனி கொடுத்தவன்

தகடூரிலே ஓர் அரசன் இருந்தான். அவன் பெயர் அதியமான். அவன் மிகவும் வீரம் உள்ளவன். அவன் பல பெரிய அரசர்களைப் போரில் புறங்காட்டி ஓடச் செய்தவன். அவனுக்குப் புலவர்களிடத்தில் மிகுதியும் விருப்பம் உண்டு. அவன் ஔவையார், பரணர் முதலிய பெரிய புலவர்களை ஆதரித்து வந்தான். அவர்கள் அவனுடைய வீரத்தையும், தான தருமங்களையும் பலவிதமாகப் புகழ்ந்து பாடினார்கள். அவன் புலவர்களைத் தன்னுடைய அரசியல் போக்குகளிலும் புகுந்து வேலை செய்யும்படி விடுவது வழக்கம். அவன் ஔவையார் என்ற பெண் புலவரிடத்தில் மிகுதியும் மதிப்பு வைத்திருந்தான். ஔவையார் மிகவும் நன்றாய்ப் படித்த பெண்பிள்ளை; மிகுந்த வயதானவர்; நன்றாய்ப் பாட்டுக்கள் பாடுவார். அவருடைய பாட்டுக்கள் ஒவ்வொன்றிலும் நல்ல புத்திமதிகள் நிறைந்திருக்கும்.

ஒரு சமயம் அதியமானுக்கும் தொண்டைமான் என்ற மற்றோர் அரசனுக்கும் போர் உண்டாகும் போல் இருந்தது. அப்பொழுது, ஔவையார் தூதாகப் போய், அச்சண்டையை

நடக்க விடாமல் தடுத்தார். மற்றொரு சமயம் எழினி என்ற அரசன் அதியமானுடன் போர் செய்து இறந்தான். வேறொரு சமயம் அதிய மான் திருக்கோவலூர் அரசனோடு போர் செய்து வெற்றி அடைந்தான். பரணர் என்ற புலவர் இந்த வெற்றியைப் புகழ்ந்து பாடிக் கொண் டாடினார். அவனிடத்தில் மழவர் என்ற ஒரு வகை வீரர்கள் இருந்தார்கள். அவர்கள் போர் செய்வதில் பேர்போனவர்கள். அவனுக்குப் பொருட்டு எழினி என்ற பெயருடைய ஒரு மகன் உண்டு.

பிள்ளைகளே! நீங்கள் எல்லோரும் கரும்பு என்ற தின்பண்டத்தைக் கண்டும் இருப்பீர்கள்; கடித்துச் சாற்றினைக் குடித்தும் இருப்பீர்கள். அதனைத் தேவருலகத்திலிருந்து முதன் முதலாக நம்முடைய நாட்டுக்குக் கொண்டு வந்தவர்கள் யார் என்று நினைக்கிறீர்கள்? இந்த அதியமானு டைய பாட்டன்மார்களே! நெல்லிக்கனி என் ருல் இன்னது என்பது உங்களுக்குத் தெரியும். அதில் கறுப்பு நிறமுடைய நெல்லிக்கனியும் உண்டு. அது கிடைப்பது மிகவும் அருமை. கரு நெல்லிக் கனியைச் சாப்பிட்டவர்கள், தேவா மிழ்தம் சாப்பிட்டவர்களைப்போல், நெடுங்காலம் வாழ்ந்து இருப்பார்கள்.

ஒருசமயம் அதியமானுக்கு அப்படிப்பட்ட கரு நெல்லிக்கனி ஒன்று கிடைத்தது. அவன் அதை என்ன செய்யலாம் என்று ஆலோசித்தான். "நல்ல புலவர்கள் நீண்ட காலம் உயிரோடு இருப்பது உலகத்திற்கு நல்லது" என்ற கருத்து அப்பொழுது அவனுக்கு உண்டாயிற்று. ஆகையால், அவன் நல்ல புலவராகிய ஔவையாரை அழைத்தான்; அந்தக் கருநெல்லிக் கனியை அவருக்குக் கொடுத்தான். ஔவையார் அதைச் சாப்பிட்டார்: நீண்டகாலம் உயிரோடு இருந்தார்; அருமையான பல பாட்டுக்களையும், நூல்களையும் பாடி முடித்தார்.

---

## 9. ஆத்திரக்காரிக்கு அறிவு மட்டு

காவிரிப்பூம்பட்டினத்திலே ஒரு பார்ப்பனி இருந்தாள். அவளுக்கு நெடுநாளாய்ப் பிள்ளை இல்லாமல் இருந்தது. அவள் நாடோறும் கோயிலுக்குப் போனாள்; கடவுளைக் கும்பிட்டு ஒரு குழந்தை கொடுக்கும்படி கேட்டுக்கொண்டாள். அவள் அநேக நோன்புகளையும் நோற்றுப் பார்த்தாள். எனினும் குழந்தை ஒன்றுகூட அவளுக்குப் பிறக்கவில்லை.

பக்கத்து வீட்டில் உள்ள சில பெரிய மனிதர்கள், "கீரிப்பிள்ளை ஒன்றை வளர்த்துவந்தால்

குழந்தை பிறக்கும்'' என்று அவளுக்குப் புத்தி மதி சொன்னார்கள். அவர்கள் சொற்படியே, அவள் ஒரு கீரிப்பிள்ளையை வாங்கி வளர்த்தாள். அவள் அதற்கு நாடோறும் வயிறு நிறையப் பசுவின் பால் கொடுத்துவந்தாள். அது நன்றாய் வளர்க்கப்பட்டது. அது குழந்தைபோல, அவளிடத்தில் அன்பாய் இருந்தது.

இப்படி இரண்டு ஆண்டுகள் கழிந்தன. மூன்றாவதாண்டில் அவர்கள் சொற்படியே அப்பார்ப்பனிக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அவளுக்கு மிகுந்த மகிழ்ச்சி யுண்டாயிற்று. அவள் அந்த ஆண் குழந்தையையும், கீரிப்பிள்ளையையும் மிகுந்த அன்பாக வளர்த்துவந்தாள். அழகான அந்த ஆண் குழந்தையைப் பார்க்கும்போதெல்லாம் அவளுக்கு மகிழ்ச்சி மிகுந்துவிடும். உடனே, அவள் குழந்தையை எடுத்து, முகத்தோடு முகம் வைத்து, முத்தமிட்டுக் கொஞ்சி விளையாடுவாள். அடுத்த நொடியில், அவளுக்குக் கீரிப்பிள்ளையின் நினைவு வந்துவிடும். உடனே, அவள் கீரிப்பிள்ளையை எடுத்து மார்போடு அணைத்துக்கொள்வாள். "என்னுடைய அருமையான கீரியே! உன்னால் அல்லவா எனக்கு இக்குழந்தை கிடைத்தது?" என்று அவள் அதனோடும் கொஞ்சி விளையாடுவாள்.

அவள், ஒருநாள் மாலைவேளையில், தண்ணீர் கொண்டு வருவதற்காகக் குடத்துடன் வெளியே போனாள். அப்பொழுது, குழந்தை தொட்டிலில் தூங்கிக்கொண்டு இருந்தது. கீரிப்பிள்ளை அவளால் குழந்தைக்குக் காவலாக வைக்கப்பட்டது. அவளுடைய கணவன் அப்பொழுது யாதோ வேலையாக வெளியே போய்இருந்தான். நல்ல பாம்பு ஒன்று அச்சமயம் அங்கே வந்தது. அது தூங்கிக்கொண்டுஇருந்த குழந்தையைக் கடிக்கப் போயிற்று. கீரிப்பிள்ளை பாம்பிற்குப் பகை அல்லவா? அது எப்படிப்பட்ட பாம்புகளையும் கடித்துக் கொன்றுவிடும். குழந்தையைக் கடிக்க வந்த பாம்பை அந்தக் கீரிப்பிள்ளை பிடித்துக் கடித்துத் துண்டம் துண்டமாகச் செய்தது.

கீரிப்பிள்ளை, இந்தச் சங்கதியைப் பார்ப்பனிக்குத் தெரிவிக்கவேண்டும் என்ற எண்ணம் கொண்டது. ஆகையினாலே, அது பாம்பின் இரத்தம் பட்ட வாயுடன் பார்ப்பனி வரும் வழியை நோக்கி நடந்தது. அப்பொழுது, அவள் தண்ணீர் நிறைந்த குடத்துடன் வீட்டுக்குள் நுழைந்தாள். நுழைந்த அவள் கீரிப்பிள்ளையின் இரத்தம்பட்ட வாயினைப் பார்த்தாள்; கீரிப்பிள்ளை தன் மகனைக் கடித்துக் கொன்றுவிட்டதாக எண்ணினாள். உடனே, அவளுக்குக்

கீரிப் பிள்ளையின் மேல் கோபம் உண்டாய்விட்



டது. அதனால், அவள் தண்ணீர்க் குடத்தைக் கீரிப்பிள்ளையின் தலையில் போட்டு உடைத்தாள்.

கீரிப்பிள்ளை தண்ணீர்க் குடத்தால் தலை உடைபட்டுச் செத்தது. பார்ப்பனி குழந்தை தொட்டிலில் சௌக்கியமாய்ப் படுத்திருப்பதையும் பக்கத்தில் பாம்பு ஒன்று கடிபட்டுக் கிடப்பதையும் பார்த்தாள்; ஐயோ! ஆத்திரக்காரியாகிய எனக்கு அறிவு மட்டாய்ப் போய்விட்டதே என்று கூவி அழுதாள். அழுது என்ன பயன்? ஆண்டாண்டுதோறும் அழுது புரண்டாலும், மாண்ட கீரிப்பிள்ளை வருமோ? வரமாட்டாது, அல்லவா?

# 10. நல்ல அரசர்

## I

மதுரைப் பட்டணத்திலே ஓர் அரசர் இருந்தார். அவர் நல்ல அறிவுடையவர். குடிகள் இடத்தில் மிகுந்த அன்பு உள்ளவர். அவர் குடிகளுடைய வருமானத்தில் ஆறில் ஒரு பங்கை மட்டும் வரியாக வாங்கினர். அவர் வரிப் பணத்தை எல்லாம் குடிகளுடைய நன்மைக்கே செலவழித்தார். அவர் சொந்தச் செலவுக்குக் கொஞ்சப் பணமே எடுத்துக்கொள்வார். அவர் பட்டினத்தில் எல்லாப் பக்கங்களிலும் உடல் நலப் பாதுகாப்பு முறைகளைச் செய்துவந்தார். அவர் மக்களுக்குள்ளே பொய்யும், களவும், கொலையும் நடக்கவிடாமல் தடுத்தார். அவருக்குக் குடிகளுடைய எண்ணத்தைத் தெரிந்து கொள்ள மிகுந்த ஆவல் உண்டு. ஆகையால் அவர் நாடோறும் இரவு வேளையில் நகர சோதனைக்குப் போய்வருவார்.

ஒருநாள் இரவு அவர் நகர சோதனைக்குப் போனர். அப்பொழுது, அவர் சேவகனைப் போல் உடை தரித்திருந்தார். அவர் அநேக வீதிகளைச் சுற்றிவந்தார். சந்து பொந்துகளையும் நுழைந்து பார்த்தார். அவர், ஏழைகள் எல்லாம் எப்படி இருக்கிறார்கள் என்று பார்த்தார். அப் பட்டணத்தில், பார்ப்பனர்கள் வசிக்கும் தெரு ஒன்று இருந்தது. அந்தத் தெருவில் ஐம்பது வீடுகள் இருந்தன. அவ்வீடுகளில்

வசிக்கும் பார்ப்பனர்கள் எல்லாரும் மிகுந்த ஏழைகள்; ஆனாலும், நன்றாய்ப் படித்தவர்கள்; கடவுள் இடத்தில் பக்தி உள்ளவர்கள். அந்தத் தெருவிலும் அரசர் போனார். வீடுகள் எல்லாம் மூடப்பட்டு அரவம் இல்லாமல் இருந்தன. தெருக் கடைசியில் உள்ள ஒரு வீட்டில் மட்டும் இரண்டு மனிதர்களுடைய பேச்சுக்குரல் கேட்டது.

அரசர் அந்த வீட்டினுடைய சுவர் ஓரத்தில் போய் நின்றார்; அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்று காதுகொடுத்துக் கேட்டார். அவ்வீட்டுக்காரனும் அவனுடைய மனைவியும் அங்கே பேசிக்கொண்டிருந்தார்கள். வீட்டுக்காரன் மறுநாள் கங்கையாற்றில் நீராடுவதற்குப் புறப்பட முடிவு செய்திருந்தான். அவனுடைய மனைவி "தாம் போய்த் திரும்பும்வரை என்னைக் காப்பாற்றுவது யார்?" என்று, தன் கணவனைக்கேட்டாள். அதற்கு அவன் "நமது நல்ல அரசர் உன்னைக் காப்பாற்றுவார்" என்று பதில் சொன்னான்.

அரசருக்கு இதைக் கேட்டவுடனே பெருமகிழ்ச்சி உண்டாயிற்று. அவர் அரசராகிய தம்மைக் குடிகள் தகப்பன்போல் நம்பி இருப்பதைக் கண்டு ஆனந்தக் கூத்தாடினார். நடுச்சாமம் கழிந்தது. பொழுது விடியும் வேளையும் வந்தது. ஆதலால் அரசர் அந்த இடத்தை விட்டு அரண்மனைக்குப் போனார்; படுக்கையில் படுத்து நன்றாய்த் தூங்கினார்.

மறுநாள் அரசர் படுக்கையை விட்டு எழுந்தார். உடனே, முதல் நாள் இரவு நடந்த செய்தி அவருடைய நினைவிற்கு வந்தது. அவர், கங்கை யாற்றில் நீராடச் சென்ற பார்ப்பனர் திரும்பும் வரை அவருடைய மனைவியைக் காப்பாற்ற வேண்டும் என்று எண்ணினார். ஆனால், அவளுக்கு மட்டும் அரிசி, பருப்பு முதலிய உணவுப் பொருள்களை அரசர் கொடுத்தால், பார்ப்பவர்கள் ஏளனம் செய்வார்கள் அல்லவா? அதற்காக, அரசர், அத் தெருவில் உள்ள ஐம்பது வீடுகளுக்கும் அரிசி, பருப்பு முதலிய சாமான்களை நாடோறும் கொடுத்துவரும்படி மந்திரிக்குக் கட்டளையிட்டார். மேலும், அவர் நாடோறும் இரவு வேளையில் சேவகனைப் போல் உடுத்திக் கொண்டு அப்பார்ப்பனர் வீட்டைக் காவல் காத்துவந்தார்.

II

இப்படியாகப் பலநாட்கள் கழிந்தன. ஒருநாள் இரவு அந்தப் பார்ப்பனர் வீட்டில் ஆண் குரல் கேட்டது. அரசர் அதைக் கேட்டு மிகவும் திடுக்கிட்டுப் போனார். அரசனை நம்பிப் போன பார்ப்பனர் வீட்டில் ஆண் குரல் கேட்பது அவருக்கு மிகுந்த கவலையை உண்டாக்கியது. அவர், அக் குரலுடைய மனிதன் நல்லவனோ கெட்டவனோ என்று ஐயப்பட்டார்.

கெட்டவர்கள் அஞ்சி மறைந்து கொள்வதும், நல்லவர்கள் அஞ்சாமல் பேசுவதும் உலக வழக்கு அல்லவா? ஆதலால், அந்தப் பார்ப்பனருடைய வீட்டுக் கதவு அரசரால் தட்டப்பட்டது. கங்கையாடச் சென்றிருந்த பார்ப்பனர் அன்று பகல் வேளையிலேயே வந்துவிட்டார். இச்செய்தி அரசருக்குத் தெரியாது. கதவைத் தட்டியவுடனே, அந்தப் பார்ப்பனர் அதட்டிய குரலில், "யாரது?" என்று கேட்டார்.

பார்ப்பனருடைய அதட்டிய குரலைக் கேட்டவுடனே அரசர்க்கு ஐயந் தீர்ந்துவிட்டது. ஆனாலும், அந்தப் பார்ப்பனருக்குக் கதவைத் தட்டியவன், "யாரோ?" என்ற ஐயம் உண்டாகும் அல்லவா? அதற்காக அரசர் அத்தெருவில் உள்ள ஐம்பது வீட்டுக் கதவுகளையும் தட்டிவிட்டு, அரண்மனை போய்ச் சேர்ந்தார்.

ஐம்பது வீட்டுப் பார்ப்பனர்களும் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தார்கள். ஒருவருக்கொருவர், "கதவைத் தட்டியது யார்?" என்று கேட்டுக்கொண்டார்கள். கதவு தட்டியது யார் என்று அவர்களால் கண்டு பிடிக்க முடியவில்லை. அந்தப் பார்ப்பனர்கள், 'நல்ல அரசர் ஆளுகையிற் கூட இப்படிப்பட்ட வம்பர்கள் இருக்கிறார்களே!' என்று வருத்தப்பட்டார்கள்.

அடுத்த நாள் காலைவேளை வந்தது. அந்தத் தெருவில் உள்ள ஐம்பது வீட்டுப் பார்ப்பனர்களும் அரண்மனைக்குப் போனார்கள்.



அரசர் அவர்களுக்கு ஆசனங்கள் கொடுத்து உபசரித்தார். அந்தப் பார்ப்பனர்கள் நடந்த செய்தியை அரசர் இடத்தில் தெரிவித்துக் கொண்டார்கள். அரசர், அவ்விதம் தட்டிய வம்பனுக்கு என்ன தண்டனை கொடுக்கலாம் என்று அவர்களைக் கேட்டார். அவர்கள், கதவைத் தட்டிக் கலவரப் படுத்திய கள்ள

னுடைய கையை வெட்டிவிட வேண்டும் என்று சொன்னார்கள். உடனே, அரசர் வாளை எடுத்தார்; தம்முடைய வலக் கையை வெட்டினார். இரத்தம் வெளிப்பட்டு ஓடியது.

பார்ப்பனர்கள் இதனைக் கண்டு நடு நடுங்கினார்கள். பிறகு அவர்கள் அரசர் அப்படிச் செய்ததற்குக் காரணம் என்ன என்று கேட்டார்கள். அரசர், அவர்களுக்கு நடந்த செய்திகளை எல்லாம் விளக்கமாக எடுத்துச் சொன்னார். பார்ப்பனர்களுக்கு மிகவும் வருத்தம் உண்டாயிற்று. அவர்கள் யாவரும் அப்பட்டணத்தில் உள்ள கோயிலுக்குப் போனார்கள். அந்த நல்ல அரசருடைய வெட்டுப்பட்ட வலக்கையும் பொன் கையாக வளர்ந்தது. அதுமுதல் அந்த அரசரை எல்லாரும் **பொற்கைப் பாண்டியன்** என்று அழைத்துவந்தார்கள்.

---

## 11. நீதிமன்னன்

திருவாரூரிலே ஓர் அரசன் இருந்தான். அவன் மிகவும் நீதிமான். அவனுக்கு, தன்னுயிரைப்போல மன்னுயிர்களைக் காப்பது வழக்கமாய் இருந்தது. அவன் கடவுள் மேலும் மிகுந்த அன்பு உடையவன். அவனுக்கு ஏழைகளிடத்தில் மிகுந்த இரக்கம் உண்டு. அவன் ஆடு, மாடு, குதிரைகள் முதலிய சிறு உயிர்களிடத்திலும் மிகுந்த அன்பு வைத்து நடந்துவந்தான்.

அவனுக்கு ஒரே ஒரு மகன் இருந்தான். அந்த மகன் இளமையிலேயே எல்லா நூல்களையும் படித்து அறிவாளியாய் இருந்தான். அவனுக்கு அரசர்க்கு வேண்டிய படைக்கலப் பயிற்சிகளி லும் நல்ல தேர்ச்சி உண்டு. அவன் நல்ல அழ கோடு கூடிப் பதினாறு வயது முடியப் பெற்று இருந்தான். ஓர் இளவரசனுக்கு வேண்டிய எல்லாக் குணங்களும் அவனிடத்தில் இருந்தன.

பிள்ளைகளே! நீங்கள் எப்பொழுதாவது தேரைப் பார்த்திருக்கிறீர்களா? உங்களில் பலர் பெரிய ஊர்களில் நடக்கும் திருவிழாக்களில் அதைக் கண்டு இருக்கக் கூடும். தேரை ஓட்டிச் சவாரி செய்வதில் அந்த அரச குமாரனுக்கு விருப்பம் மிகுதியும் உண்டு. அதனால் அவன் பல தேர்கள் வைத்திருந்தான். அவன் நாடோ றும் காலை மாலை வேளைகளில் தேர்மேல் ஏறி அந்த ஊரைப் பல தடவைகள் சுற்றி வருவான்.

ஒருநாள் காலை வேளையில், அவன் ஓர் அழ கிய தேரின் மேல் ஏறினான்: திருவாரூர்த் தெருக் களில் அத்தேரை ஓட்டிக்கொண்டு போனான். தேர் மிகுந்த விரைவாகப் போய்க்கொண்டு இருந்தது. அதிலிருந்து படபட, சடசட, மட மட, தடதட என்று பலவிதமான ஒலிகள் உண் டாய்க்கொண்டு இருந்தன. அந்தத் தேர் போகும் தெருவில் ஒரு பசுவும், அதனுடைய இளங்கன்றும் நின்றுகொண்டு இருந்தன. கன்று தேரைத் தொலையில் காணும்பொழுதே வெருவிப் பார்த்தது. ஏனென்றால், அது, அதற்கு முன்

எவ்விதமான தேரையும் பார்த்தது இல்லை. தேரிலிருந்து உண்டாகும் ஒலிகளும் கன்றி னுடைய காதுகளில் நுழைந்தன. உடனே, அது தன் காதுகளை முன் பக்கம் நீட்டி நிறுத் தியது. இதற்குள் தேரும் கன்றின் அருகில் வந்தது. கன்று திடீரென்று துள்ளிக் குதித்தது; தேரின் முன்னால் பாய்ந்தது. தேர் விரைவாய்ப் போய்க்கொண்டு இருந்தபடியால், அரச குமார னால் அதை நிறுத்த முடியவில்லை. அது அந்த இளங்கன்றின் மேல் ஏறியது. கன்று தேர்ச் சக் கரங்களால் அரைபட்டு இறந்தது.

தாய்ப் பசு இதனைக் கண்டு அடைந்த துன் பமோ கணக்கு வழக்கில்லை. அது, இரத்த வெள்ளத்தில் கிடக்கும் கன்றை மோந்து பார்த் துப் பார்த்துக் கதறியது. அங்கே அவ்வூர் மக் கள் பலர் கூடினார்கள். அரச குமாரனும் தேரை விட்டுக் கீழே இறங்கினான்; பசுவின் துன்பத் தைப் பார்த்து மிகவும் மன வருத்தப்பட்டான். மன வருத்தப்பட்டு ஆவது என்ன? அணை கடந்த வெள்ளம் திரும்புமோ! எவ்வளவு துன்பப்பட்டாலும் இறந்த கன்று வருமோ? வர மாட்டாது, அல்லவா? ஆதலால் அரசகுமாரன் பசுவின் சொந்தக்காரனுக்குக் கன்றின் விலை யாகப் பல பொன் நாணயங்களைக் கொடுத்தான். பசுவின் கன்றைக் கொன்ற பாவத்திற்குப் பரி காரமாக, தங்கத்தால் செய்த பல பசுக்கன்றுகள் பல பிராமணர்களுக்குத் தானமாகக் கொடுக்கப் பட்டன.

இவ்வளவு செய்தும், அந்தப் பசுவுக்கு இறந்து போன அதனுடைய கன்று கிடைக்க வழியைக்



காணவில்லை. பிராமணர்களுக்குத் தங்கக் கன்றுகளைக் கொடுத்தது போல, பசுவுக்குத் தங்கக் கன்றைக் கொடுத்து ஏமாற்ற முடியுமோ? முடியாது அல்லவா? ஆகையால் துன்பம். மிகுந்த அந்தப் பசு அரசனுடைய அரண்மனையை நோக்கிப் போயிற்று. அவ்வூர் அரசன் தன்னுடைய அரண்மனை வாசலில் பெரிய மணி

ஒன்றைக் கட்டிவைத்திருந்தான். அவ்வூர் மக்களுக்கு யாராவது கெடுதி செய்தால், உடனே, அவர்கள் அதை, அரண்மனை வாசலிற் கட்டியுள்ள மணியை அசைத்து அரசனுக்குத் தெரிவிப்பார்கள். அரசன் வெளியே வந்து நடந்த சங்கதிகளைக் கேட்டு வேண்டிய பரிகாரங்களைச் செய்வது வழக்கம்.

அந்த அறிவுள்ள பசுவும் அரண்மனை வாசலில் கட்டியுள்ள மணியைக் கொம்புகளால் அசைத்து ஓசையை உண்டாக்கியது. மணியோசை கேட்டதும், அரசன் அங்கே வந்தான். பசுவோ, கண்ணீர் வடிந்த முகத்தோடு அரசனை இரக்கமாகப் பார்த்தது. பேசமுடியாத பசுவுக்கு அதற்கு மேல் என்ன செய்ய முடியும்? அரசனுக்கோ ஒன்றும் தெரியவில்லை. பசுவோ மனிதர்களைப் போல் நீதியினை வேண்டி நிற்கிறது! அரசன் எப்படியாவது பசுவின் துன்பத்தைக் கண்டுபிடித்துப் பரிகாரம் செய்ய விரும்பினன்.

ஆகையால், அவன் சில வேவுகாரர்களை அழைப்பித்தான்; அப்பசுவுக்கு உண்டான துன்பம் என்ன என்று கண்டுபிடிக்கும்படி அவர்களுக்குக் கட்டளை கொடுத்தான். வேவுகாரர்களும் அரசனுடைய கட்டளைப்படியே ஊரெங்கும் போய்ப் பலரைக் கேட்டும், பல விடங்களைப் பார்த்தும் திரும்பினர்கள். அரசனிடம் நடந்த சங்கதிகள் சொல்லப்பட்டன. அவன் அவைகளைக் கேட்டு மிகவும் வருத்தப்பட்டான்.

சிறிது நேரத்தில், அரசனால் ஒரு பெரிய கூட்டம் கூட்டப்பட்டது. அதற்கு அரசனுடைய அமைச்சர்களும் பல பெரிய மனிதர்களும் வந்திருந்தார்கள். அரசன் அக் கூட்டத்தில் தன்னுடைய மகனை வழக்காளிகள் நிற்க வேண்டிய இடத்தில் நிறுத்தினான். நடந்த செய்திகள் அவனால் நன்கு விசாரிக்கப்பட்டன. முடிவில், அரசன் தன்னுடைய மகன் ஊருக்குள் விரைவாகவும், கவலைக் குறைவாகவும் தேரோட்டியது தவறு என்று முடிவு செய்தான். அதே தேரால், அதே விதமாகத் தன் மகன் அரைக்கப்படவேண்டும் என்ற முடிவும் அவனால் கொடுக்கப்பட்டது.

கூட்டத்திலுள்ள எல்லாரும் அரசனுடைய தீர்ப்பைக் கேட்டுத் திடுக்கிட்டுப்போனார்கள். மந்திரிகள், அத்தீர்ப்பு சரியன்று என்றும், ஓர் எளிய கன்றினுடைய உயிர்க்காக ஓர் அரச குமாரன் உயிரை வாங்குவது கூடாது என்றும் சொன்னார்கள். அங்குள்ள பெரிய மனிதர்கள் எல்லாரும் இளவரசுக்கு வேண்டிய அந்த அரச குமாரனைக் கொல்வது கூடாதென்று தடுத்தார்கள். அரசனோ அவர்களுடைய பேச்சைக் காதில் கூடப் போட்டுக்கொள்ளவில்லை. அவன் எப்படியாவது தன்னுடைய தீர்ப்பை நிறைவேற்றும்படி தன்னுடைய முதல் மந்திரிக்கு உத்தரவு கொடுத்தான்; அவ்விடத்தை விட்டு எழுந்து அரண்மனைக்குப் போனான்.

முதல் மந்திரிக்கு அரசகுமாரனைக் கொல்ல மனம் வரவில்லை; அரசனுடைய கட்டளையை மீறவும் வழியில்லை. ஆகையால், முதல் மந்திரி தன்னுடைய வாளால் தன்னைத்தானே வெட்டித் தற்கொலை செய்துகொண்டான். உடனே இச் செய்தி அரசனுக்குத் தெரிவிக்கப்பட்டது.

அரசன் அப்பொழுதும் மனம் கலங்க இல்லை. அவன் சேவகர்களால், தன் மகனையும் அந்தத் தேரையும் பசுவின் கன்று அரைபட்ட இடத்திற்குக் கொண்டுபோகச் செய்தான். அரச குமாரன் சேவகர்களால் அங்கே கிடத்தப்பட்டான். அரசன் அந்தத் தேரின்மேல் ஏறித் தன் மகன் மேல் அந்தத் தேரை ஓட்டினான். அரச குமாரனும் பசுவின் கன்றினைப் போல் இரத்த வெள்ளத்தில் கிடந்தான்.

கடவுள் அரசனுடைய நீதியைக் கண்டு வியப்பும், மகிழ்ச்சியும் அடைந்தார். அவர் அங்கே தோன்றி, அரசன் முதலியோர்களுக்குக் காட்சி கொடுத்தார். அவர் அரசனைப் பார்த்து, "ஓ! நீதியுள்ள மன்னனே! நீ நீடூழிகாலம் வாழ்க" என்றுவாழ்த்தினார். அவரை அங்குள்ள அரசனும் மற்றவர்களும் வணங்கிக் கொண்டாடினார்கள். கடவுளுடைய அருளினால், இறந்து போன பசுவின் கன்றும், முதல் மந்திரியும், அரச குமாரனும் பிழைத்து எழுந்தார்கள். பசு, கன்றினைக் கண்டு களி கொண்டது. அரசன் பசுவின் துன்பம் நீங்கியதைப் பார்த்துப் பூரித்தான்; தன்னுடைய மகனை மார்பிறுகக் கட்டித் தழுவி மகிழ்ந்தான்.

---

